# திருவேங்கடப்பாமாலை

தொகுப்பு:
'தமிழ்க்கடல்', 'சிவமணி',
'சிவம்பெருக்குஞ்சீலர்'
ராய. சொ.

வெளியீடு:
அ.பிச்சையா. பழ. நாச்சியப்பன்.
1968

IMS0010

2265

# திருவேங்கடப்பாமாலை

தொகுப்பு;

'தமிழ்க்கடல்', 'சிவமணி',

'சிவம்பெருக்குஞ்சீலர்'

ராய. சொ.

பிலவங்க, தை உக. 4–2–68.

இராதை - பழநியப்பன்

திருமணம்

வெளியீடு:

அபிசீனியா. பழ. நாச்சியப்பன்

காரைக்குடி.

# பாசுரத் தொகுப்பு

உ

சிவமயம்

# திருவேங்கடப் பாமாலை

## நூல்முகம்

கூன்கொண்டு சென்றவன் கூன்நிமிர்ந்து
ஓட, குருடன்கொம்பில்
தேன்என்று காட்ட, முடவன் அத்
தேனை எடுக்க, அயல்
தான்நின்ற ஊமை தனக்குஎன்று
கேட்க, தருவன்வரம்!
வான்நின்ற சோலை வடவேங்-
-கடமேய மாதவனே.

என்று பாடி மகிழ்ந்தார் ஒருபுலவர், கூனன் ஒருவன் திருவேங்கடமலையை அணுகியவுடன் கூன்நிமிர்ந்து ஓடத் தொடங்கினான்; குருடன் ஒருவன் அம்மலையில் ஏறியவுடன் 'இந்தக்கொம்பில் தேன் இருக்கிறது' என்று காட்டினான்; கால் நுடங்கிய ஒருவன் அத்தேனை எடுத்தேவிட்டான்; அணித்தே நின்ற வாய்பேசா ஊமை ஒருவன் அத்தேனை 'எனக்கு' என்றுகேட்டான். இப்படியாக அருள் சுரப்பான் வடவேங்கடமலை மாதவன், என்பது பாட்டின் கருத்து.

வடசொற்கும், தென்சொற்கும் வரம்பிற்ருய்
நான்மறையும், மற்றை நூலும்
இடைசொற்ற பொருட்குஎல்லாம் எல்லையதாய்
நல்அறத்துக்கு ஈருய், வேறு
புடைசுற்றும் துணைஇன்றி, புகழ்பொதிந்த
மெய்யேபோல் பூத்து நின்ற
அடைசுற்றும் தண்சாரல் ஓங்கியவேங்
கடத்தில்சென்று அடைதிர் மாதோ.

என்றும்,

'கோடுறுமால் வரையதனைக் குறுகுதிரேல்
உம்நெடிய கொடுமை நீங்கி
வீடுறுதிர்...'

எனவும் கவிச்சக்கரவர்த்தி கம்பர் கூறுவர்.

'சித்திக்குஒரு விதைஆகிய
தென்நாட்டினை அணுகி,
தத்திச்சொரி அருவித்தட
அரவக்கிரி சார்ந்தான்'

என்று கூறுவர் வில்லிபுத்தூராழ்வார்.

தேன்ஓங்கு சோலைத்
திருவேங் கடம்என்றும்
... ... ... ... ... ...
... ... ... ... ...
சொன்னவர்க்கும் உண்டோதுயர்.

என்பர் பாரதம் பாடிய பெருந்தேவனர்.

'மாண்டு,பிறக் கும்துயர்போய்
வைகுந்தம் புக்கவரும்

மீண்டுதொழக் காதலிக்கும்
வேங்கடமே'

என்று இயம்பிஞர் பிள்ளைப்பெருமாள் ஐயங்கார்.

'படியாய்க் கிடந்துஉன்
பவழவாய் காண்பேனே'
'செண்பகமாய் நிற்கும்
திருவுடையன் ஆவேனே'
'மீஞய்ப் பிறக்கும்
விதியுடையன் ஆவேனே'
'கானுருய்ப் பாயும்
கருத்துடையன் ஆவேனே'
'நெறியாய்க் கிடக்கும்
நிலையுடையன் ஆவேனே'

என்றெல்லாம் கூறி அமையாது,

'எம்பெருமான் பொன்மலையில்
ஏதேனும் ஆவேனே'

எனத் திருவேங்கடத்தின் பெருமையைப் பெருமிதத்துடன் பேசுவார் குலசேகரப் பெருமாள்.

இன்ன சிறப்பு வாய்ந்த திருவேங்கடத்தைப் பற்றி அருளாளர்களாகிய ஆழ்வார்கள் பதின்மர் பாடிய பாசுரத் தொகை 213. அவ் அனைத்தையும் தொகுத்துக் குறிப்புரை யோடு இந்நூலில் தரப்பெற்றுள்ளது.

திருவேங்கடமுடையானிடம் தீராக்காதல் கொண்ட சைவத்திருவாளர், என் அரிய நண்பர், பொதுப்பணிகள் எதிலும் ஈடுபட்டுத் திறமையாகச் செயல் புரியும் ஆற்றல்

வாய்ந்தவர், அபிசீனியா. பழ. நாச்சியப்பனார், தம் மகள் இராதையின் திருமணப் பரிசாக இதனை வெளியிட்டு, சிறப்புப் பெறுகின்றார்.

இவ் அரிய நூலை வெளியிடும் அன்னார் எல்லாச் சிறப்பும் பெற்றுப் பொலிய வாழ்த்துகின்றேன்.

இந்நூல் தோன்றக் காரணராக இருந்த மணமக்கட்குப் பல்லாண்டு! பல்லாண்டு! பல்லாயிரத்தாண்டு!

இதனைப் படித்துப் பயன்பெறும் அன்பர்கட்கெல்லாம் வாழ்த்து.

காரைக்குடி,
3—1—68.

ராய. சொ.

# I. பெரியாழ்வார்

1 சுற்றும் ஒளிவட்டம் சூழ்ந்து,
சோதி பரந்துஎங்கும்,
எத்தனை செய்யிலும் என்ம -
- கன்முகம் நேர்ஒவ்வாய்!
வித்தகன், வேங்கட வாணன்
உன்னை விளிக்கின்ற
கைத்தலம் நோவாமே அம்பு -
- லீ!கடிது ஓடிவா! க

2 ''என்இது மாயம்!என்
அப்பன் அறிந்திலன்,
முன்னைய வண்ணமே
கொண்டுஅள வாய்''என்ன,
மன்னும் நமுசியை
வானில் சுழற்றிய
மின்னும் முடியானே!
அச்சோ! அச்சோ!
வேங்கட வாணனே!
அச்சோ! அச்சோ! உ

1 நேர் ஒவ்வாய்: நிகராகமாட்டாய். வித்தகன்: அறிஞன். விளிக்கின்ற: அழைக்கின்ற. அம்புலி: சந்திரா. குழந்தையோடு விளையாட அம்புலியை அழைத்தல்.

2 நமுசி: மகாபலியின் மகன். 'பழைய குட்டை வடிவத்தைக் கொண்டே அளக்க' என நமுசி கூறினான் என்பது கதை. அச்சோ: அணைத்துக்கொள்.

3

தென்இலங்கை மன்னன்
சிரம்,தோள் துணிசெய்து,
மின்இலங்கு பூண்,வி-
-பீடண நம்பிக்கு,
'என்இலங்கு நாமத்து
அளவும் அரசு'என்ற
மின்அலங் காரற்கு
ஓர்கோல் கொண்டுவா,
வேங்கட வாணற்கு
ஓர்கோல் கொண்டுவா. ௩

4

மச்சொடு மாளிகை ஏறி
மாதர்கள் தம்மிடம் புக்கு,
கச்சொடு பட்டைக் கிழித்து,
காம்பு துகில்அவை கீறி,
நிச்சலும் தீமைகள் செய்வாய்;
நீள்திரு வேங்கடத்து எந்தாய்!
பச்சைத் தமனகத் தோடு
பாதிரிப் பூச்சூட்ட வாராய்! ௪

3. துணிசெய்து: அறுத்து. மின்: 1. ஒளி. 2. திருமகள். இலங்கு: விளங்குதல். பூண்: நகை. "என் இலங்கு நாமத்து அளவும் அரசு" என்பதை, 'என்னுடை நாமம் நிற்கும் அளவெலாம் இலங்கை மூதூர் மன்னவன் நீயே' என்று கம்பர் கூறுவர்.

மின் அலங்காரர்: திருமகளை அழகாக அணிந்து கொண்டவர். கோல்: விளையாடும் குச்சி.

4. மச்சு: மேல்தளம். கச்சு: இரவிக்கை. நிச்சல்: நாள்தோறும். பச்சைத்தமனகம்: பச்சைக்கல் பதித்த நகை. பாதிரிப்பூ: ஒருவகைப் பூ.

5 போதர்கண் டாய்;இங்கே போதர் கண்டாய்;
போதரேன் என்னுதே போதர் கண்டாய்;
ஏதேனும் சொல்லி அசல்அ கத்தார்
ஏதேனும் பேசநான் கேட்க மாட்டேன்;
கோது கலம்உடைக் குட்ட னேயோ!
குன்றுஎடுத் தாய்!குடம் ஆடு கூத்தா!
வேதப் பொருளே! என்வேங் கடவா!
வித்தக னே!இங்கே போத ராயே! ௫

6 கடிஆர் பொழில்அணி வேங்கட வா!கரும்
போர்ஏ றே!நீ உகக்கும்
குடையும் செருப்பும் குழலும் தருவிக்கக்
கொள்ளாதே போனுய், மாலே!
கடியவெங் கானிடைக் கன்றின்பின் போன
சிறுகுட் டச்செங் கமல
அடியும் வெதும்பி,உன் கண்கள் சிவந்தாய்,
அசைந்திட் டாய்,நீ எம்பிரான்! ௬

5. போதர்கண்டாய்: வாராய். அசல் அகத்தார்: அண்டை வீட்டார். கோதுகலம்: உள்ளக்களிப்பு. சிறுகுட்டன்: சிறுபிள்ளை.

6. கடி: மணம். பொழில்: சோலை. கரும்போர்ஏறு: கருமை நிறம் வாய்ந்த போர்செய்யும் சிங்கம். சிறுகுட்டச் செங்கமல அடி. சிறிய குட்டையான செந்தாமரை போன்ற திருவடி.

7 சென்னிஓங்கு தண்திருவேங்-
கடம்உடையாய்! உலகு
தன்னைவாழ நின்றநம்பீ!
தாமோத ரா!சதிரா!
என்னையும்என்உ டைமையையும்,உன்
சக்கரப்பொறி ஒற்றிக்கொண்டு
நின்அருளே புரிந்திருந்தேன்;
இனிஎன் திருக்குறிப்பே? எ

7. சென்னி: சிகரம். சக்கரப்பொறி ஒற்றிக்கொள்ளல்: முத்திராதானம் என்று சொல்லும் சக்கர அடையாளத்-தைப் பொறித்துக் கொள்ளுதல். இனி என் திருக் குறிப்பே: இனி உன் உள்ளக்கிடக்கை யாது.

## 2. ஆண்டாள்

8 தைஒரு திங்களும் தரைவிளக்கி,
தண்மண் டலம்இட்டு மாசிமுன்னாள்
ஐயநுண் மணல்கொண்டு தெருஅணிந்து
அழகினுக்கு அலங்கரித்து, அனங்கதேவா!
உய்யவும் ஆம்கொலோ? என்றுசொல்லி
உன்னையும் உம்பியை யும்தொழுதேன்;
வெய்யதுஓர் தழல்உமிழ் சக்கரக்கை
வேங்கட வற்குஎன்னை விதிக்கிற்றியே. க

9 மத்தநன் நறுமலர் முருக்கமலர்
கொண்டுமுப் போதும்உன் அடிவணங்கித்
தத்துவம் இலிஎன்று நெஞ்சுஎரிந்து
வாசகத்து அழித்துஉன்னை வைதிடாமே,
கொத்துஅலர் பூங்கணை தொடுத்துக்கொண்டு
கோவிந்தன் என்பதுஓர் பேர்எழுதி
வித்தகன் வேங்கட வாணன்என்னும்
விளக்கினிற் புக,என்னை விதிக்கிற்றியே. உ

8 மண்டலம்: வட்டம். அனங்கதேவன்: மன்மதக்கடவுள். உன்னை: மன்மதனாகிய உன்னை. ஐய: அழகுடைய. உம்பியை: உன்னைப்போல் அழகிற் சிறந்த உன் தம்பியாகிய சாமன் என்பவனை. வெய்யது: வெப்பமுடையது. தழல் உமிழ்சக்கரம்: நெருப்பைக்கக்குகின்ற ஆழி. ‘தீப்பிறக்கும் சக்கரம்’ என்பர் பெருந்தேவனார். ‘தீச்சூழ்ந்ததிகிரி’ என்று அருளுவர் அப்பர் சுவாமிகள். விதிக்கிற்றி: விதிப்படி மணம் செய்து வைப்பாயாக.

9 மத்த நன் நறுமலர்: நல்ல மணமுள்ள ஊமத்தம்பூ. தத்துவம் இலி: உடல் வலி இல்லாதவன்: கொத்து: பூங்கொத்து.

10 காட்டில் வேங்கடம்.
கண்ண புரநகர்,
வாட்டம் இன்றி
மகிழ்ந்துஉறை வாமனன்;
ஓட்ட ராவந்துஎன்
கைப்பற்றித், தன்னொடும்
கூட்டு மாகில்,நீ
கூடிடு கூடலே! ௩.

11 வெள்ளை விளிசங்கு இடங்கையில் கொண்ட
விமலன் எனக்குஉருக் காட்டான்;
உள்ளம் புகுந்துஎன்னை நைவித்து நாளும்
உயிர்பெய்து, கூத்தாட்டுக் காணும்
கள்அவிழ் செண்பகப் பூமலர் கோதி,
களித்து இசை பாடும் குயிலே!
மெள்ள இருந்து மிழற்றி மிழற்றாதுஎன்
வேங்கட வன்வரக் கூவாய்! ௪

10 காட்டில்: காட்டுவதானால். ஓட்டராவந்து: ஓடிவந்து. எண்ணிய காரியம் கைகூடுவதற்கு வட்டமிட்டுக்கூடச் செய்யும் முறையில் பாடிய பாசுரம் இது.

11 நைவித்து: வருத்தி. கள்: தேன். கோதி: கிழித்து. மிழற்றி: ஒலி எழுப்பி. மிழற்றாது: ஓசைப்படாமல்.

12 விண்நீல மேலாப்பு
விரித்தால்போல் மேகங்காள்!
தெண்ணீர்பாய் வேங்கடத்துஎன்
திருமாலும் போந்தானே?
கண்ணீர்கள் முலைக்குவட்டில்
துளிசோரச் சோர்வேனை,
பெண்நீர்மை ஈடுஅழிக்கும்
இதுதமக்குஓர் பெருமையே? ரு

13 மாமுத்த நிதிசொரியும்
மாமுகில்காள்! வேங்கடத்துச்
சாமத்தின் நிறங்கொண்ட
தாடாளன் வார்த்தைஎன்னே?
காமத்தீ உள்புகுந்து
கதுவப்பட்டு இடைக்கங்குல்
ஏமத்துஓர் தென்றலுக்குஇங்கு
இலக்காய்நான் இருப்பேனே. சு

இப்பதிகம் பத்துப்பாசுரங்களும் வேங்கடத்தை நோக்கிய மேகவிடுதூது.

12 மேலாப்பு: மேற்கட்டி. குவடு: உச்சி. சோர: சொட்ட. சோர்வேன்: வருந்துவேன். பெண் நீர்மை: பெண் தன்மை. ஈடழித்தல்: பெருமிதத்தைக் கெடுத்தல். பெருமையே: பெருமையாகுமா?

13 முத்த நிதி: முத்துச்செல்வம். சாமத்தின் நிறம்: நள்ளிருளின் வண்ணம். தாடாளன்: சிறப்பு வாய்ந்தவன். கதுவுதல்: எரித்தல். ஏமம்: ஆற்றல்.

14 ஒளிவண்ணம் வளை,சிந்தை
உறக்கத்தோடு இவையெல்லாம்
எளிமையால் இட்டுஎன்னை
ஈடுஅழியப் போயினவால்;
குளிர்அருவி வேங்கடத்துஎன்
கோவிந்தன் குணம்பாடி,
அளியத்த மேகங்காள்!
ஆவிகாத்து இருப்பேனே. எ

15 மின்ஆகத்து எழுகின்ற
மேகங்காள்! வேங்கடத்துத்
தன்ஆகத் திருமங்கை
தங்கியசீர் மார்வற்கு
என்ஆகத்து இளங்கொங்கை
விரும்பித்தாம் நாள்தோறும்
பொன்ஆகம் புல்குதற்குஎன்
பரிவுடைமை செப்புமினே. அ

14 *எளிமையால் இட்டு: எளிமையாக நீங்கி. அளி: கருணை. அத்த: நீங்கிய.*

15 *மின் ஆகத்து எழுகின்ற: மின்னலது உடம்பினின்றும் தோன்றுகின்ற. தன் ஆக: தன்னுடையவளாக. புல்குதல்: அணைதல். புரிவுடைமை: இசைவு.*

16 வான்கொண்டு கிளர்ந்துஎழுந்த
மாமுகில்காள்! வேங்கடத்துத்
தேன்கொண்ட மலர்சிதறத்
திரண்டுஏறிப் பொழிவீர்காள்!
ஊன்கொண்ட வள்உகிரால்
இரணியனை உடல்இடந்தான்
தான்கொண்ட சரிவளைகள்
தருமாகில் சாற்றுமினே. ௬

17 சலம்கொண்டு கிளர்ந்துஎழுந்த
தண்முகில்காள்! மாவலியை
நிலம்கொண்டான் வேங்கடத்தே
நிரந்துஏறிப் பொழிவீர்காள்!
உலங்குஉண்ட விளாங்கனிபோல்
உள்மெலிய, புகுந்து,என்னை
நலம்கொண்ட நாரணற்குஎன்
நடலைநோய் செப்புமினே. ௧௦

16 வான்கொண்டு: ஆகாயத்தை மறைத்துக் கொண்டு. கிளர்ந்து: ஓங்கி. வள்உகிர்: கூரிய நகங்கள். இடந்தான்: பிளந்தான். சரிவளைகள்: கழன்றவளைகள். சாற்றுமினே: தெரிவியுங்கள்.

17 சலம்: நீர். நிரந்து: பரந்து. உலங்கு: பெரும்கொசுகு. நலம்: அழகு. நடலைநோய்: துன்பப்பிணி.

18 சங்கமா கடல்கடைந்தான்
தண்முகில்காள்! வேங்கடத்துச்
செங்கண்மால் சேவடிக்கீழ்
அடிவீழ்ச்சி விண்ணப்பம்;
கொங்கைமேல் குங்குமத்தின்
குழம்புஅழியப் புகுந்து,ஒருநாள்
தங்குமேல், என்ஆவி
தங்கும்என்று உரையீரே. கக

19 கார்காலத்து எழுகின்ற
கார்முகில்காள்! வேங்கடத்துப்
போர்காலத்து எழுந்துஅருளிப்
பொருதவனர் பேர்சொல்லி,
நீர்காலத்து எருக்கில்அம்
பழஇலைபோல் வீழ்வேனை
வார்காலத்து ஒருநாள்தம்
வாசகம்தந்து அருளாரே. கஉ

18 *சங்கம் : சங்குகள். அடிவீழ்ச்சி : அடியேனுடைய.*

19 *கார்காலம் : மழைக்காலம். பொருதல் : போரிடுதல். நீர் காலம்: மழைக்காலம். பழ இலை : பழுப்பு இலைகள். வார் காலம் : நீண்டு செல்லும் காலம். வாசகம் : வார்த்தை.*

20 மதயானை போல்எழுந்த
    மாமுகில்காள்! வேங்கடத்தைப்
பதியாக வாழ்வீர்காள்!
    'பாம்புஅணையான் வார்த்தைஎன்னே!
கதிஎன்றும் தானாவான்
    கருதாது,ஓர் பெண்கொடியை
வதைசெய்தான்!' என்னும்சொல்
    வையகத்தார் மதியாரே. கஙு

21 நாகத்தின் அணையானை
    நன்னுதலாள் நயந்துஉரைசெய்
மேகத்தை வேங்கடக்கோன்
    விடுதூதில் விண்ணப்பம்,
போகத்தில் வழுவாத
    புதுவையர்கோன் கோதைதமிழ்
ஆகத்து வைத்துஉரைப்பார்
    அவர்அடியார் ஆகுவரே. கச

20 பதி: இருப்பிடம். அணை: படுக்கை. வையகத்தார்: உலகோர்.

21 நல்நுதலாள்: அழகிய நெற்றியுடையாள் (இங்கே) ஆண்டாள். நயந்து: ஆசைப்பட்டு. போகம்: இறை யனுபவம்.

22 பாடும் குயில்காள்! ஈதென்ன
பாடல்?நல் வேங்கட
நாடர் நமக்குஒரு வாழ்வுதந்
தால்,வந்து பாடுமின்!
ஆடும் கருளக் கொடிஉடை-
யார்வந்து அருள்செய்து
கூடுவர் ஆயிடில் கூவி,நும்
பாட்டுக்கள் கேட்டுமே. கரு

23 மழையே! மழையே! மண்புறம்
பூசிஉள் ளாய்நின்ற
மெழுகுஊற்றி னால்போல், ஊற்றுநல்
வேங்கடத் துள்நின்ற
அழகப் பிரானார் தம்மைஎன்
நெஞ்சத்து அகப்படத்
தழுவநின்று, என்னைத் ததைத்துக்கொண்டு
ஊற்றவும் வல்லையே? கசா

22 கருளன் : கருடன்.

23 மண்புறம் பூசி: மேல்புறத்திலே மண்ணைப் பூசிவிட்டு. உள்ளாய் நின்ற: உள்ளேஇருக்கும். ததைத்து: நெருக்கி.

## 3. குலசேகராழ்வார்

24 ஊன்ஏறு செல்வத்து
 உடல்பிறவி யான்வேண்டேன்,
ஆன்ஏறுஏழ் வென்றான்
 அடிமைத் திறம்அல்லால்;
கூன்ஏறு சங்கம்
 இடத்தான்தன் வேங்கடத்துக்
கோனேரி வாழும்
 குருகாய்ப் பிறப்பேனே. க

25 ஆனாத செல்வத்து
 அரம்பையர்கள் தற்சூழ
வானாளும் செல்வமும்
 மண்ணரசும் யான்வேண்டேன்;
தேன்ஆர் பூஞ்சோலைத்
 திருவேங்க டச்சுனையில்
மீனாய்ப் பிறக்கும்
 விதியுடையேன் ஆவேனே. உ

இப்பதிகம் பதினொரு பாசுரங்களும் வேங்கடம்பற்றியன.

24 ஊன் ஏறு: (நாளுக்கு நாள்) மாமிசம் வளர்ந்து தடிக்கை. ஆன் ஏறு: எருது. கூன் ஏறு சங்கம்: வளைந்திருக்கும் பாஞ்சசன்யம் என்னும் சங்கு. கோனேரி: வேங்கடமலையிலுள்ள சுனையின் பெயர். குருகு: நாரை.

25 ஆனாத செல்வம்: அழியாத இளமைச் செல்வம். தற்சூழ: தன்னைச்சூழ்ந்து நிற்க. தேன் ஆர்: தேன்மிக்க. விதி: பேறு.

26 பின்னிட்ட சடையானும்
பிரமனும் இந்திரனும்
துன்னிட்டுப் புகல்அரிய
வைகுந்த நீள்வாசல்
மின்வட்டச் சுடர்ஆழி
வேங்கடக்கோன் தான்உமிழும்
பொன்வட்டில் பிடித்துஉடனே
புகப்பெறுவேன் ஆவேனே. ௬

27 ஒண்பவள வேலை
உலவுதண் பாற்கடலுள்
கண்துயிலும் மாயோன்
கழல்இணைகள் காண்பதற்கு,
பண்பகரும் வண்டினங்கள்
பண்பாடும் வேங்கடத்து,
செண்பகமாய் நிற்கும்
திருஉடையேன் ஆவேனே. ௭

26 பின்னிட்ட சடையான்: சிவன். துன்னிட்டு: நெருக்கி. மின் வட்டம் சுடர் ஆழி: மின்னலை வளைத்தாற் போல ஒளிமயமான சக்கரம். பொன்வட்டில்: தங்கக்காளாஞ்சி.

27 ஒண்பவளவேலை உலவு: ஒளியுள்ள பவழக்கொடிகளைக் கரையிலே கொணர்ந்து கொழித்து (அலைகள்) உலவுகிற. பண்: இசை. இனம்: கூட்டம். திரு: 1. செல்வம். 2. பேறு.

28 கம்பமத யானைக்
கழுத்தகத்தின் மேல்இருந்து,
இன்புஅமரும் செல்வமும்
இவ்அரசும் யான்வேண்டேன்;
எம்பெருமான் ஈசன்
எழில்வேங் கடமலைமேல்
தம்பகமாய் நிற்கும்
தவம்உடையேன் ஆவேனே. ரு

29 மின்அனைய நுண்ணிடையார்
உருப்பசியும் மேனகையும்
அன்னவர்தம் பாடலொடும்
ஆடல்அவை ஆதரியேன்;
தென்னஎன வண்டினங்கள்
பண்பாடும் வேங்கடத்துள்
அன்னனைய பொற்குவடாம்
அருந்தவத்தன் ஆவேனே. சு

28 கம்பம்: கட்டுத்தறி. 'கம்பமதத்துக்களியானை' என்பர் கம்பர். இன்பு: இன்பம். அமரும்: நுகரும். தம்பகம்: தூண்.

29 மின் அனைய: மின்னல் போன்ற. ஆதரியேன்: விரும்பேன். தென்ன: ஒலிக்குறி. பொன் குவடு: பொற் சிகரம். அரு: அருமையான.

30 வான்ஆளும் மாமதிபோல்
வெண்குடைக்கீழ், மன்னவர்தம்
கோனாகி வீற்றிருந்து
கொண்டாடும் செல்வுஅறியேன்;
தேன்ஆர் பூஞ்சோலைத்
திருவேங் கடமலைமேல்
கானாறாய்ப் பாயும்
கருத்துஉடையேன் ஆவேனே. எ

31 பிறைஏறு சடையானும்
பிரமனும் இந்திரனும்
முறையாய பெருவேள்விக்
குறைமுடிப்பான் மறையானான்;
வெறிஆர்தண் சோலைத்
திருவேங் கடமலைமேல்
நெறியாய்க் கிடக்கும்
நிலையுடையேன் ஆவேனே. அ

30 செல்வு: வாழ்வு. கானாறு: காட்டாறு.

31 பிறை ஏறு சடையான்: இளமதி சூடிய சிவபெருமான். முறை: தகுதி. வெறி: மணம். நெறி: வழி.

32 செடியாய வல்வினைகள்
தீர்க்கும் திருமாலே!
நெடியானே! வேங்கடவா!
நின்கோயி லின்வாசல்
அடியாரும் வானவரும்
அரம்பையரும் கிடந்துஇயங்கும்
படியாய்க் கிடந்துஉன்
பவளவாய் காண்பேனே. கூ

33 உம்பர் உலகுஆண்டு
ஒருகுடைககீழ் உருப்பசிதன்
அம்பொற் கலைஅல்குல்
பெற்ருலும் ஆதரியேன்;
செம்பவள வாயான்
திருவேங் கடம்என்னும்
எம்பெருமான் பொன்மலைமேல்
ஏதேனும் ஆவேனே. க0

32 செடியாயவல்வினை நோய்தீர்க்கும்: செடிபோல் அடர்ந்த வலிய வினைப் பிணியைத் தீர்க்கின்ற. 'செடியுடைய வல்வினை நோய் தீர்ப்பாய்' என்பர் அப்பர் அடிகள். 'செடிசேர் உடலம் இது நீக்கமாட்டேன்' என்பது திருவாசகம்.

(இப்பாசுரத்தை ஒட்டி, கோயிலின் வாசற்படி 'குலசேகரப்படி' என்று வழங்கப்பட்டு வரும் மரபு உள்ளது)

33 ஆதரியேன்: விரும்பேன். ஏதேனும்: ஏதாவது ஒன்று. எல்லாம் கேட்டு இறுதியில் ஏதாவது என்பர்.

34 மன்னியதண் சாரல்
வடவேங் கடத்தான்தன்
பொன்இயலும் சேவடிகள்
காண்பான் புரிந்துஇறைஞ்சிக்
கொல்நவிலும் கூர்வேல்
குலசே கரன்சொன்ன
பன்னியநூல் தமிழ்வல்லார்
பாங்காய பத்தர்களே. கக

34 மன்னிய : நிலைபெற்ற. பொன் இயலும் : பொன்போன்ற. புரிந்து : விரும்பி. கொல் நவிலும் : (பகைவர்களை) கொல்லும் தொழிலைப் பயின்ற. பன்னிய : ஆராய்ந்த. பாங்காய : (இறைவன் திரு உள்ளத்துக்கு) உகந்த.

## 4. திருமழிசையாழ்வார்

35 குன்றில்நின்று, வான்இருந்து,
நீள்கடல்கி டந்துமண்
ஒன்றுசென்று,அது ஒன்றைஉண்டு,அது
ஒன்றுஇடந்து, பன்றியாய்
நன்றுசென்ற நாள்அவற்றுள்
நல்உயிர்ப டைத்தவர்க்கு
அன்றுதேவு அமைத்துஅளித்த
ஆதிதேவன் அல்லையே? க

36 செழுங்கொழும்பெ ரும்பனிபொ-
-ழிந்திட,உ யர்ந்தவேய்
விழுந்துஉலர்ந்துஎ ழுந்துவிண்பு-
-டைக்கும்வேங் கடத்துள்நின்று
எழுந்திருந்து தேன்பொருந்து
பூம்பொழில்த ழைக்கொழும்
செழும்தடம்கு- டந்தையுள்,கி
டந்தமாலும் அல்லையே? உ

35 குன்று: (இங்கே) திருவேங்கடமலை. வான்: பரமபதம். கடல்: பாற்கடல். தேவு: தேவதைகளை. அல்லையே: அல்லவோ.

36 செழும் கொழும் பெரும்பனி: இடைவிடாது தாரைகளாய் விழுகிற கனத்த மூடு பனி. புடைக்கும்: முட்டும். குடந்தை: கும்பகோணம்.

37 கடைந்தபாற்க டல்கிடந்து,
காலநேமி யைக்கடிந்து,
உடைந்தவாலி தன்பினுக்கு
உதவவந்துஇ ராமனாய்,
மிடைந்தஏழ்ம ரங்களும்அ
டங்கஎய்து, வேங்கடம்
அடைந்தமா லபாதமே
அடைந்துநாளும் உய்ம்மினோ. ௩

38 குறிப்புஎனக்குக் கோட்டியூர்
மேயானை ஏத்த;
குறிப்புஎனக்கு நன்மை
பயக்க; — வெறுப்பனோ
வேங்கடத்து மேயானை,
மெய்வினைநோய் எய்தாமல்
தான்கடத்தும் தன்மையான் தாள். ௪

37 காலநேமி: காலநேமி என்னும் அசுரன். கடிந்து: ஒழித்து. உடைந்த: தளர்ந்த. வாலி தன்பின்: சுக்கிரீவன். 'உடைந்த' என்பதைச் சுக்கிரீவனுடன் கூட்டுக. மிடைந்த: நெருங்கிய. மாலபாதம்: மாலின் திருவடி.

38 கோட்டியூர்: திருக்கோட்டியூர். ஏத்த: துதிக்க. கடத்தும்: போக்கும்.

39 அழைப்பன் திருவேங்
கடத்தானைக் காண,
இழைப்பன் திருக்கூடல்
கூட; — மழைப்பேர்
அருவி மணிவரன்றி
வந்துஇழிய, யானை
வெருவி அரவுஒடுங்கும் வெற்பு. ரு

40 வெற்புஎன்று வேங்கடம்
பாடினேன்; வீடுஆக்கி
நிற்கின்றேன்; நின்று
நினைக்கின்றேன்; — கற்கின்ற
நூல்வலையில் பட்டிருந்த
நூலாட்டி கேள்வனார்
கால்வலையில் பட்டிருந்தேன் காண். சூ

39 *திருக் கூடல் இழைப்பன் : கூடல் இழைக்கின்றேன். மணிவரன்றி : இரத்தினங்களைத் திரட்டிக்கொண்டு. வெருவி : அஞ்சி. ஒடுங்கும் : மறையும். வெற்பு : மலை.*

40 *வீடு : மோக்கம். நூல் : மறையாதி சாத்திரங்கள். நூலாட்டி : திருமகள். கேள்வன் : கணவன்.*

41 காணல் உறுகின்றேன்
கல்அருவி முத்துஉதிர,
ஓண விழவில்
ஒலிஅதிர, — பேணி
வருவேங் கடவா!என்
உள்ளம் புகுந்தாய்
திருவேங் கடம்அதனைச் சென்று. எ

42 சென்று வணங்குமினோ
சேண்உயர் வேங்கடத்தை,
நின்று வினைகெடுக்கும்
நீர்மையால் — என்றும்
கடிக்கமல நான்முகனும்
கண்மூன்றத் தானும்
அடிக்கமலம் இட்டுஏத்தும் அங்கு. அ

41 *கல் அருவி: ஒலிக்கின்ற அருவி. ஓணவிழவில்: திருவோணத் திரு நாளில். பேணி: விரும்பி.*

42 *சேண் உயர்: மிகவும் ஓங்கின. நீர்மையால்: தன்மையால். கடிக் கமலம்: மணம்மிக்கதாமரை. கண்மூன்றத்தான்: முக்கண்பெற்ற சிவன்.*

43 மங்குல்தோய் சென்னி
வடவேங் கடத்தானை
கங்குல் புகுந்தார்கள்
காப்புஅணிவான் — திங்கள்
சடைஏற வைத்தானும்
தாமரைமே லானும்
குடைஏறத் தாம்குவித்துக் கொண்டு. ௯

44 கொண்டு குடங்கால்மேல்
வைத்த குழவியாய்
தண்ட அரக்கன்
தலை,தாளால் — பண்டுஎண்ணி
போம்குமரன் நிற்கும்
பொழில்வேங் கடமலைக்கே
போம்,குமரர் உள்ளீர் புரிந்து. ௧௦

43 மங்குல் தோய்சென்னி : மேக மண்டலத்தளவும் சென்று கிட்டியிருக்கிற சிகரம். காப்பு : திருவந்திக்காப்பு. திங்கள் : சந்திரன். குவித்தல் : சேகரித்தல்.

44 குடங்கால் : மடி. தண்ட அரக்கன் : தண்டிக்கத்தகும் இராவணன். புரிந்துபோம் : ஆசை கொண்டு செல்லுங்கள்.

45 புரிந்து மலர்இட்டுப்
புண்டரிகப் பாதம்
பரிந்து படுகாடு
நிற்ப — தெரிந்துஎங்கும்
தான்ஓங்கி நிற்கின்றான்
தண்அருவி வேங்கடமே
வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு. கக

46 வைப்பன் மணிவிளக்கா,
மாமதியை, மாலுக்குஎன்று
எப்பொழுதும் கைநீட்டும்
யானையை — எப்பாடும்
வேடுவளைக் கக்குறவர்
வில்எடுக்கும் வேங்கடமே
நாடுவளைத்து ஆடுமேல் நன்று. க௨

45 *புண்டரிகம்: தாமரை. பரிந்து: விரும்பி. படுகாடுநிற்ப: வெட்டிவிழ்த்தமரங்கள் போல் கால் பேராமல் நிற்கும்படி. வைப்பு: நிதி*

46 *மணி விளக்கு: மங்கல தீபம். எப்பாடும்: நாற்புறமும். வேடு வளைக்க: வேடர் சூழ்ந்து கொள்ள. நாடு: நாட்டார். வளைத்து: வலம் வந்து.*

47 நன்மணி வண்ணன்ஊர்,
ஆளியும் கோளரியும்
பொன்மணியும் முத்தமும்
பூமரமும் — பன்மணிநீ-
ரோடு பொருதுஉருளும்
கானமும் வானமும்
வேடும் உடைவேங் கடம். கரு

48 வேங்கடமே விண்ணோர்
தொழுவதுவும்; மெய்ம்மையால்
வேங்கடமே மெய்வினைநோய்
தீர்ப்பதுவும்; — வேங்கடமே
தானவரை வீழத்தன்
ஆழிப் படைதொட்டு
வானவரைக் காப்பான் மலை. கச

47 வண்ணன் : வடிவத்தான். ஆளி : யாளி. கோளரி : வலிமை தங்கிய சிங்கம். பொருது : கலந்து.

48 தானவர் : அசுரர்கள்.

49 வீற்றிருந்து விண்ணாள
வேண்டுவார் வேங்கடத்தான்
பால்,திருந்த வைத்தாரே
பன்மலர்கள் — மேல்திருந்த
வாழ்வார் வருமதிபார்த்து
அன்பினராய் மற்றவர்க்கே
தாழ்வாய் இருப்பார் தமர். கரு

49 *திருந்த: நன்றாக. வரும்மதி பார்த்து: (எம்பெருமானுடைய திருவுள்ளத்தில்) ஓடுகின்ற கருத்தை அறிந்து. தமர்: அடியார்.*

## 5. திருப்பாணாழ்வார்

50 அமலன், ஆதிபிரான், அடியார்க்கு
என்னை ஆட்படுத்த
விமலன், விண்ணவர் கோன், விரை
ஆர்பொழில் வேங்கடவன்,
நிமலன், நின்மலன், நீதிவானவன்,
நீள்மதிள் அரங்கத்து அம்மான்திருக்
கமல பாதம்வந்து என்கண்ணின்
உள்ளன ஒக்கின்றதே. க

51 மந்தி பாய்வட வேங்கட
மாமலை, வானவர்கள்
சந்தி செய்யநின்றான் அரங்கத்து
அரவின் அணையான்
அந்தி போல்நிறத்து ஆடையும் அதன்மேல்
அயனைப் படைத்ததுஓர்எழில்
உந்தி மேலதுஅன் றோஅடி
யேன்உள்ளத்து இன்உயிரே. உ

50 அமலன் : தூயன். விமலன் : மேலோன். விரை : மணம்.

51 மந்தி : குரங்கு. சந்தி : வழிபாடு. உந்தி : கொப்பூழ்.

## 6. திருமங்கையாழ்வார்

52 கொங்கு அலர்ந்த மலர்க்கு ருந்தம்
ஒசித்த கோவலன் எம்பிரான்,
சங்கு தங்கு தடங்க டல்துயில்
கொண்ட தாமரைக் கண்ணினன்.
பொங்கு புள்ளினை வாய்பி ளந்தபு-
ராணர் தம்இடம், பொங்குநீர்
செங்க யல்திளைக் கும்சு னைத்திரு
வேங்க டம்அடை நெஞ்சமே. க

53 பள்ளி யாவது பாற்க டல்,அரங்
கம்,இ ரங்கவன் பேய்முலை
பிள்ளை யாய்உயிர் உண்ட எந்தைபி
ரான்அ வன்பெரு கும்இடம்
வெள்ளி யான்கரி யான்,ம ணிநிற
வண்ணன் என்றுஎண்ணி, நாள்தொறும்
தெள்ளி யார்வணங் கும்ம லைத்திரு
வேங்க டம்அடை நெஞ்சமே. உ

52 கொங்கு அலர்ந்த: மணம் வீசுகின்ற. பொங்கு புள்: (இங்கே) செருக்குடன் கிளர்ந்து வந்த பகாசுரன். பொங்கு நீர்: நீர் வளமுடையதாய். திளைக்கும்: வாழும்.

53 வன்பேய் இரங்க: கல் நெஞ்சை உடையாளான பூதனை என்னும் அரக்கி கதறும்படி. பெருகும்: வளரும். தெள்ளியார்: தெளிந்த ஞானிகள். வெள்ளியானும் கரியான், மணி நிறவண்ணனும் திருமாலே என்பது கருத்து.

54 நின்ற மாமருது இற்று வீழ,ந
டந்த நின்மலன் நேமியான்
என்றும் வானவர் கைதொ ழும்இணைத்
தாம ரைஅடி எம்பிரான்
கன்றி மாரி பொழிந்தி டக்கடிது
ஆநி ரைக்குஇடர் நீக்குவான்
சென்று,குன்றம் எடுத்த வன்,திரு
வேங்க டம்அடை நெஞ்சமே! ௩

55 பார்த்தற் காய்அன்று பார தம்கைசெய்-
-திட்டு வென்ற பரஞ்சுடர்,
கோத்துஅங்கு ஆயர்தம் பாடி யில்,குர-
-வைபி ணைந்தஎம் கோவலன்,
ஏத்து வார்தம் மனத்துள் ளான்இட-
எந்தை மேவிய எம்பிரான்
தீர்த்த நீர்த்தடம் சோலை சூழ்,திரு
வேங்க டம்அடை நெஞ்சமே! ௪

54 நேமியான் : சக்கரப்படை தாங்கிய திருமால். கன்றி: (இந்திரன்) கோபம் கொண்டு. ஆநிரை: பசுக்கூட்டம்.

55 பார்த்தன் : அருச்சுனன். பாரதம்: பாரதப்போர். கை செய்திட்டு: உண்டாக்கி. இடஎந்தை : திருவிடஎந்தை என்ற வைணவத்தலம்.

56 வண்கை யான்அவு ணர்க்கு நாயகன்
வேள்வி யில்சென்று மாணியாய்
மண்கை யால்இரந் தான்,ம ராமரம்
ஏழும் எய்த வலத்திஞன்.
எண்கை யான்,இம யத்துள் ளான்,இருஞ்
சோலே மேவிய எம்பிரான்,
திண்கைம் மாதுயர் தீர்த்த வன்,திரு
வேங்க டம்அடை நெஞ்சமே! ரு

57 எண்தி சைகளும் ஏழு லகமும்
வாங்கிப் பொன்வயிற் றில்பெய்து
பண்டுஒர் ஆலிலேப் பள்ளி கொண்டவன்
பால்ம திக்குஇடர் தீர்த்தவன்
ஒண்தி றல்அவு ணன்உ ரத்துஉகிர்
வைத்த வன்,ஒள்ள யிற்றெடு
திண்தி றல்அரி யாய வன்,திரு
வேங்க டம்அடை நெஞ்சமே! சு

56 வண்கையான்: கொடைக்கையான். அவுணர்க்கு நாயகன்: அசுரர் தலைவஞன மகாபலி. மாணி: பிரமசாரி. வலத்திஞன்: வலிமையிஞன். எண்கையான்: பிரமன் இமையத்துள்ளான்: சிவன். இருஞ்சோலே: திருமாலிருஞ் சோலே. திண்கைமா: திடமான துதிக்கையையுடைய கசேந்திரன்.

57 பெய்து: இட்டு வைத்து. பால்மதி: வெளுத்தசந்திரன். ஒள்: ஒளி. எயிறு: பல். திறல்: வலிமை. அவுணன்: இரணியன். உரம்: மார்பு. உகிர்: நகம்.

58 பாரும் நீர்,எரி காற்றி னேடுஆ-
காச மும்இவை ஆயினுன்;
பேரும் ஆயிரம் பேச நின்ற,பி
றப்பி லிபெரு குமிடம்,
காரும் வார்பனி நீள்வி சும்பிடைச்
சோரு மாமுகில் தோய்தர,
சேரும் வார்பொழில் சூழ்எ ழில்,திரு
வேங்க டம்அடை நெஞ்சமே! எ

59 அம்ப ரம்,அனல், கால்,நி லம்,சலம்
ஆகி நின்ற அமரர்கோன்;
வம்பு லாம்அலர் மேல்ம லிமட
மங்கை தன்கொழு நனவன்,
கொம்பி னன்ன,இ டைம டக்குற-
மாதர் நீள்இத ணங்தொறும்
செம்பு னம்அவை காவல் கொள்,திரு-
வேங்க டம்அடை நெஞ்சமே! அ

58 ஆயிரம் பேர்: சகஸ்ரநாமம். காரும்: மழை நீரும். வார் பனி: மிக்கபனி. சோரும்: பெய்யும். வார்பொழில். உயர்ந்தோங்கிய சோலைகள்.

59 அம்பரம்: ஆகாயம். அனல்: நெருப்பு. கால்: காற்று. சலம்: நீர். வம்பு உலாம்: மணம் வீசுகின்ற. மலி: பொருந்திய. கொம்பின்: வஞ்சிக் கொம்போடு ஒத்த (நுண்ணிய.) நீள் இதணம்: உயர்ந்த பரண்.

60 பேசு மின்,திரு நாமம் எட்டுஎழுத்-
- தும்சொல் லிநின்று பின்னரும்
பேசு வார்தமை உய்ய வாங்கிப்பி-
- றப்புஅ றுக்கும் பிரான்இடம்
வாச மாமலர் நாறு வார்பொழில்
சூழ்த ரும்உல குக்குஎல்லாம்
தேச மாய்த்திக ழும்,ம லைத்திரு
வேங்க டம்அடை நெஞ்சமே! கூ

61 செங்க யல்திளைக் கும்சு னைத்திரு
வேங்க டத்துஉறை செல்வனை,
மங்கை யர்தலை வன்,க லிகன்றி,
வண்த மிழ்ச்செஞ்சொல் மாலைகள்
சங்கை இன்றித் தரித்துஉ ரைக்கவல்
லார்கள் தஞ்சம்அ தாகவே
வங்க மாகடல் வையம் காவலர்
ஆகி, வான்உலகு ஆள்வரே. க0

60 எட்டெழுத்து: அட்டாக்கரம். உய்யவாங்கி: உய்விக்கச் செய்து. நாறும்: மணக்கும். தேசமாய்: திலகமாய்.

61 திளைக்கும்: களித்து விளையாடும். மங்கையர் தலைவன் கலிகன்றி: திருமங்கைமன்னனான கலிகன்றி. சங்கை: ஐயம். வங்கம்: கப்பல்.

62 தாயே தந்தைஎன்றும்,
தாரமேகிளை மக்கள்என்றும்,
நோயே பட்டுஒழிந்தேன்;
நுனைக்காண்பதோர் ஆசையினால்
வேயேய் பூம்பொழில்சூழ்
விரையார்திரு வேங்கடவா!
நாயேன் வந்துஅடைந்தேன்
நல்கிஆள்என்னைக் கொண்டுஅருளே. கக

63 மான்ஏய் கண்மடவார்
மயக்கிற்பட்டு மாநிலத்து
நானேநா னாவித
நரகம்புகும் பாவம்செய்தேன்;
தேனேய் பூம்பொழில்சூழ்
திருவேங்கட மாமலைஎன்
ஆனாய்! வந்துஅடைந்தேன்
அடியேனைஆட் கொண்டுஅருளே. கஉ

62 கிளை: பந்துக்கள். வேய்ஏய்: மூங்கில் நிறைந்த. விரை ஆர் : மணம் வீசும். நல்கி : கருணை காட்டி.

63 ஏய்: போன்ற. மடவார்: மாதர். தேன்ஏய்: வண்டுகள் நிறைந்த. என் ஆனாய்: ஆனைபோன்ற எம்பெருமானே.

64 கொன்றேன் பல்உயிரைக்
குறிக்கோள்ஒன்று இலாமையினால்;
என்றேனும்இரந்தார்க்கு
இனிதாகஉரைத்துஅறியேன்;
குன்றுஏய் மேகம்அதிர்
குளிர்மாமலை வேங்கடவா!
அன்றே வந்துஅடைந்தேன்
அடியேனைஆட் கொண்டுஅருளே. கரு

65 குலம்தான் எத்தனையும்
பிறந்தேஇறந்து எய்த்துஒழிந்தேன்;
நலம்தான் ஒன்றுமிலேன்;
நல்லதோர்அறம் செய்துமிலேன்;
நிலம்தோய் நீள்முகில்சேர்
நெறியார்திரு வேங்கடவா!
அலந்தேன் வந்துஅடைந்தேன்
அடியேனைஆட் கொண்டுஅருளே. கசு

64 குன்றுஏய் மேகம்: மலைபோன்ற மேகங்கள்.

65 எத்தனை குலமும்: எல்லாக்குலங்களிலும். நிலம் தோய் நீள் முகில் சேர் நெறி ஆர்: பூமியிலே படிந்த மேகங்கள் நடமாடின வழிகள் பொருந்தியிருக்கிற அலந்தேன்: துன்புற்றேன்.

66 எப்பா வம்பலவும்
இவையேசெய்து இளைத்துஒழிந்தேன்;
துப்பா! நின்அடியே
தொடர்ந்துஏத்தவும் கிற்கின்றிலேன்;
செப்பார் திண்வரைசூழ்
திருவேங்கட மாமலைஎன்
அப்பா! வந்துஅடைந்தேன்
அடியேனைஆட் கொண்டுஅருளே. கரு

67 மண்ணாய் நீர்,எரி,கால்
மஞ்சுஉலாவும்ஆ காசமும்ஆம்
புண்ணார் ஆக்கைதன்னுள்
புலம்பித்தளர்ந்து எய்த்துஒழிந்தேன்;
விண்ணார் நீள்சிகர
விரையார்திரு வேங்கடவா!
அண்ணா! வந்துஅடைந்தேன்
அடியேனைஆட் கொண்டுஅருளே. கசா

66 துப்பா: தூயா. கிற்கின்றிலேன்: சக்தியற்றவனாயுள்ளேன். செப்பார்: அரனாகக் கூறுமாறு திண்ணிய மலைகள்.

67 கால்: காற்று. மஞ்சு: மேகம். ஆக்கை: உடம்பு. விண் ஆர்: ஆகாயத்தை அளாவி.

68 தெரியேன் பாலகனுய்ப்
பலதீமைகள் செய்துமிட்டேன்;
பெரியேன் ஆயினபின்
பிறர்க்கேஉழைத்து ஏழையானேன்;
கரிசேர் பூம்பொழில்சூழ்
கனமாமலே வேங்கடவா!
அரியே! வந்துஅடைந்தேன்
அடியேனை ஆட் கொண்டுஅருளே. கஎ

69 நோற்றேன் பல்பிறவி
நுனைக்காண்பதோர் ஆசையினுல்,
ஏற்றேன் இப்பிறப்பே,
இடர்உற்றனன் எம்பெருமான்,
கோல்தேன் பாய்ந்துஒழுகும்
குளிர்சோலேசூழ் வேங்கடவா!
ஆற்றேன் வந்துஅடைந்தேன்
அடியேனை ஆட் கொண்டுஅருளே. கஅ

68 கரிசேர்: யானைகள் மிகுந்திருக்கின்ற. கனம்: அடர்த்தியான.

69 நோற்றேன்: நோன்பு செய்தேன். ஏற்றேன்: ஏற்பட்டேன். ஆற்றேன்: பொறுக்க மாட்டேன்.

70 பற்றேல் ஒன்றும்இலேன்;
பாவமேசெய்து பாவியானேன்;
மற்றேல் ஒன்றுஅறியேன்;
மாயனே!எங்கள் மாதவனே!
கல்தேன் பாய்ந்துஒழுகும்
கமலச்சுனை வேங்கடவா!
அற்றேன் வந்துஅடைந்தேன்
அடியேனை ஆட் கொண்டுஅருளே. கசு

71 கண்ணாய் ஏழுலகுக்கு
உயிர்ஆயஎம் கார்வண்ணனை,
விண்ணோர் தாம்பரவும்
பொழில்வேங்கட வேதியனை,
திண்ஆர் மாடங்கள்சூழ்
திருமங்கையர் கோன்,கலியன்
பண்ஆர் பாடல்பத்தும்
பயில்வார்க்குஇல்லை பாவங்களே. உ௦

70 பற்று: ஆதாரம். கல்தேன் பாய்ந்து ஒழுகும்: மழை முழைஞ்சுகளினின்றும் தேன் பெருகி வெள்ளமிடும். அற்றேன்: (உனக்கென) அற்றுத் தீர்ந்தேன்.

71 கார்: மேகம். வண்ணம்: நிறம். பரவும்: துதிக்கும். தின் ஆர்: திண்ணிய.

72 கண்ஆர் கடல்சூழ்
இலங்கைக்கு இறைவன்தன்
திண்ஆகம் பிளக்கச்
சரம்செல உய்த்தாய்,
விண்ணோர் தொழும்வேங்
கடமா மலைமேய
அண்ணா! அடியேன்
இடரைக் களையாயே. உக

73 இலங்கைப் பதிக்குஅன்று
இறையாய அரக்கர்
குலம்கெட்டு, அவர்மாளக்
கொடிப்புள் திரித்தாய்;
விலங்கல் குடுமித்
திருவேங் கடம்மேய
அலங்கல் துளப
முடியாய்! அருளாயே. உஉ

72 கண் ஆர்: விரிந்த. திண் ஆகம்: திண்ணிய மார்பு.

73 கொடிப்புள்: தம் கொடியில் பொறித்த கருடன். திரித்தாய்: சுற்றச்செய்தாய். விலங்கல் குடுமி: மலைமுகடு. அலங்கல்: மாலை.

74 நீர்ஆர் கடலும்
நிலனும் முழுதுஉண்டு
ஏர்ஆ லம்இளம்
தளிர்மேல் துயில்எந்தாய்!
சீர்ஆர் திருவேங்
கடமா மலைமேய
ஆரா அமுதே!
அடியேற்கு அருளாயே. உ௩

75 உண்டாய் உறிமேல்
நறுநெய் அமுதாக;
கொண்டாய் குறளாய்
நிலம்ஈர் அடியாலே;
விண்தோய் சிகரத்
திருவேங் கடம்மேய
அண்டா! அடியே -
னுக்குஅருள் புரியாயே. உ௪

74 நீர் ஆர்: நீர்நிரம்பிய. ஏர் இள ஆலம் தளிர்: அழகியதும் இளையதுமான ஆலம் தளிர்.

75 குறள் ஆய்: வாமனனாய். விண்தோய்: ஆகாயம் அளாவி. அண்டா: தேவனே.

76

தூணாய் அதன்ஊடு
அரியாய் வந்துதோன்றி,
பேணா அவுணன்
உடலம் பிளந்திட்டாய்;
சேண்ஆர் திருவேங்
கடமா மலைமேய
கோள்நாகு அணையாய்!
குறிக்கொள் எனைநீயே. உரு

77

மன்றா இம்மனி -
சப்பிற வியைநீக்கி
தன்ஆக்கித் தன்இன்
அருள்செய் யும்தலைவன்
மின்ஆர் முகில்சேர்
திருவேங் கடம்மேய
என்னானை என்அப்பன்
என்நெஞ்சில் உளானே. உசு

76 ஊடு: உள்ளே. அரி: சிங்கம். பேணா: மதியாத. அவுணன்: (இங்கே) இரணியன். சேண் ஆர்: உயர்ந்து விளங்கும். கோள் நாகம்: மிடுக்கான அரவம். (இங்கே) ஆதிசேடன். அணை: பள்ளி.

77 மன்றா: நிலையாத. தன் ஆக்கி: தனக்கு ஆளாக்கி. என் ஆனை: என் ஆனைபோன்றவன்.

78 மான்ஏய் மடநோக்-
-கிதிறத்து எதிர்வந்த
ஆன்ஏய் விடைசெற்ற
அணிவரைத் தோளா!
தேனே! திருவேங்-
கடமா மலைமேய
கோனே! என்மனம்
குடிகொண்டு இருந்தாயே. உள

79 சேயன், அணியன்,
என்சிந் தையுள்நின்ற
மாயன், மணிவாள்
ஒளிவெண் தரளங்கள்
வேய்விண்டு உதிர்வேங்-
கடமா மலைமேய
ஆயன் அடிஅல்-
லதுமற்று அறியேனே. உஅ

78 மான்ஏய் : மான் போன்ற. ஆன்விடை: எருது. அணி: அழகு. வரை : மலை.

79 சேயன்: தொலைவிலுள்ளவன். அணியன்: அருகிலுள்ளவன். வாள் மணி : ஒளியுள்ள இரத்தினம். தரளம்: முத்து. வேய் : மூங்கில்.

80 வந்தாய்; மன்னிநின்றாய்;
புகுந்தாய்; மன்னிநின்றாய்;
நந்தா தகொழும்
சுடரே! எங்கள்நம்பீ!
சிந்தா மணியே!
திருவேங் கடம்மேய
எந்தாய்! இனியான்
உன்னைஎன் றும்விடேனே. உகூ

81 வில்லார் மலிவேங்
கடமா மலைமேய
மல்ஆர் திரள்தோள்
மணிவண்ணன் அம்மானை
கல்ஆர் திரள்தோள்
கலியன் சொன்னமாலை
வல்லார் அவர்,வா
னவர்ஆ குவர்தாமே. நூ0

80 மன்னி: நிலைபெற்று. நந்தாத: அணையாத. சிந்தாமணி: நினைத்தவுடன் எல்லாம் கொடுத்தருளும் இரத்தினம்.

81 வில்லார் மலி: வேடர்கள் நிறைந்த. மல்ஆர்: மிடுக்கு மிக்க. கல் ஆர்: மலை போன்ற. கலியன்: திருமங்கை மன்னன்.

82 வானவர் தங்கள் சிந்தை
போலஎன் நெஞ்சமே! இனிதுவந்து
மானவர் தங்கள் சிந்தை
அமர்ந்துஉறை கின்ற எந்தை
கானவர்இடு கார்அகில்புகை ஓங்கு
வேங்கடம் மேவி மாண்குறள்
ஆன அந்தணற்கு இன்றுஅடி -
-மைத்தொ ழில்பூண் டாயே. ௯க

83 உறவு சுற்றம்என்று ஒன்றிலா
ஒருவன் உகந்தவர் தம்மை,மண்மிசைப்
பிறவி யேகெடுப் பான்,அது
கண்டுஎன் `நெஞ்சம் என்பாய்
குறவர் மாதர்க ளோடுவண்டு
குளிர்ம ருள்இசை பாடும்வேங்கடத்து
அறவ நாயகற்கு இன்றுஅடி
மைத்தொ ழில்பூண் டாயே. ௯உ

82 மானவர் : மனிதர். கானவர் : வேடுவர்.

83 அறவன் : தருமவான்.

84 இண்டை ஆயின கொண்டு தொண்டர்கள்
ஏத்து வாரஉற வோடும், வானிடைக்
கொண்டு போயிட வும்அது
கண்டுஎன் நெஞ்சம் என்பாய்
வண்டு வாழ்வட வேங்க டமலே
கோயில் கொண்டத னேடும், மீமிசை
அண்டம் ஆண்டுஇருப் பாற்குஅடி-
மைத்தொ ழில்பூண் டாயே. ௩௩

85 பாவி யாதுசெய் தாய்என் நெஞ்சமே!
பண்டு தொண்டுசெய் தாரை, மண்மிசை
மேவி ஆட்கொண்டு போய்வி-
-சும்புஏற வைக்கும் எந்தை
கோவி நாயகன் கொண்டல் உந்துஉயர்
வேங்க டமலே யாண்டு, வானவர்
ஆவி யாய்இருப் பாற்கு அடி-
-மைத்தொ ழில்பூண் டாயே. ௩௪

84 இண்டை: பூமாலே. மீமிசை அண்டம்: அடுக்கடுக்கான அண்டங்கள்.

85 விசும்பு (இங்கே) பரமபதம். கோவி நாயகன்: கோபியர் நாதன். ஆவியாய்: உயிர் நிலேயாய்.

86 பொங்கு போதியும் பிண்டி யும்உடைப்
புத்தர் நோன்பியர் பள்ளி உள்உறை
தங்கள் தேவரும் தாங்களு
மேயாக என்நெஞ்சம் என்பாய்
எங்கும் வானவர் தான வர்நிறைந்து
ஏத்தும் வேங்கடம் மேவி நின்றுஅருள்
அங்கண் நாயகற்கு இன்றுஅடி-
-மைத்தொ ழில்பூண் டாயே ௩௫

87 துவரி ஆடையர் மட்டை யர்சமண்
தொண்டர் கள்,மண்டி உண்டு பின்னரும்
தமரும் தாங்களு மே,த-
டிக்களன் நெஞ்சம் என்பாய்
கவரி மாக்கணம் சேரும் வேங்கடம்
கோயில் கொண்டகண் ணார்வி சும்புஇடை
அமர நாயகற்கு இன்று அடி
மைத்தொ ழில்பூண் டாயே. ௩௬

86 பொங்கு போதி: கொப்பும் கிளையுமாகப் பணைத்து வளர்ந்திருக்கும் அரசமரம். பிண்டி: அசோக மரம். நோன்பியர்: அமணர்.

87 துவரி: காஷாயம். மட்டையர்: மொட்டைத் தலையர். தமர்: சேர்ந்தவர். தடிக்க: உடல் தடித்துக் கிடக்க. கவரி மாகணம்: கவரி மான்களின் கூட்டம்.

88 தருக்கி ஞல்சமண் செய்து சோறுதண்
தயிரி ஞல்திர ளே,மி டற்றிடை
நெருக்கு வார்அ லக்கண து
கண்டுஎன் நெஞ்சம் என்பாய்
மருட்கொள் வண்டுகள் பாடும் வேங்கடம்
கோயில் கொண்டதன் ஞேடும் வானிடை
அருக்கன் மேவிநிற் பாற்குஅடி-
மைத்தொ ழில்பூண் டாயே ௲எ

89 சேயன் அணியன் சிறியன் பெரியன்
என்பது சிலர்பேசக் கேட்டிருந்-
தேஎன் நெஞ்சம் என்பாய்!எ
னக்குஒன்று சொல்லாதே
வேய்கள் நின்றுவெண் முத்த மேசொரி
வேங்க டமலே கோயில் மேவிய
ஆயர் நாயகற்கு இன்றுஅடி
மைத்தொ ழில்பூண் டாயே. ௲அ

88 தருக்கிஞல்: வெறும் தருக்கங்களிஞலே. திரள்: கவளம். மிடறு: கழுத்து. அலக்கண்: துன்பம். மருள்: மருள் முதலிய இசைகளே. அருக்கன்: சூரியன்.

89 சேயன்: தொலேவிலுள்ளவன். ஆயர் நாயகன்: ஆயர் தலேவன். (கண்ணன்)

90 கூடி ஆடி உரைத்த தேஉரைத்
தாய்என் நெஞ்சம்என் பாய்!து ணிந்துகேள்
பாடி ஆடிப் பலரும்
பணிந்து ஏத்திக் காண்கிலார்;
ஆடு தாமரை யோனும் ஈசனும்
அமரர் கோனும்நின்று ஏத்தும் வேங்கடத்து
ஆடு கூத்தனுக்கு இன்றுஅடி
மைத்தொ ழில்பூண் டாயே. ௩௯

91 மின்னு மாமுகில் மேவு தண்திரு
வேங்க டமலை கோயில் மேவிய
அன்னமாய் நிகழ்ந்த
அமரர் பெருமானை,
கன்னி மாமதிள் மங்கை யர்கலி
கன்றி இன்தமி ழால்உ ரைத்த,இம்
மன்னு பாடல்வல் லார்க்குஇட
மாகும் வான்உலகே. ௪௦

90 ஆடுதாமரையோன் : பிரமன். ஈசன் : சிவன்.

91 கன்னிமாமதிள்: தீண்டற்கரிய கோட்டைச் சுவர்.

92 அன்றிய வாணன் ஆயிரம் தோளும்
துணியஅன்று ஆழிதொட் டானே,
மின்திகழ் குடுமி வேங்கட மலேமேல்
மேவிய வேதநல் விளக்கை
தென்திசைத் திலதம் அனேயவர் நாங்கைச்
செம்பொன்செய் கோயிலின் உள்ளே
மன்றுஅது பொலிய மகிழ்ந்து நின்ருனே
வணங்கிநான் வாழ்ந்துஒழிந் தேனே, சக

93 வேடார் திருவேங்
கடமேய விளக்கே!
நாடார் புகழ்,வே-
-தியர்மன் னியநாங்கூர்
சேடார் பொழில்சூழ்
திருவெள்ளக் குளத்தாய்!
பாடா வருவேன்
வினேயா யினபாற்றே. சஉ

92 அன்றிய : பகைத்த. திலதம் : திலகம். நாங்கைச் செம்பொன்செய்கோயில் : வைணவத்திருத்தலம்.

93 வேடுஆர் : வேடர் மிக்க. நாடு ஆர் புகழ் : நாடெங்கும் நிறைந்த புகழையுடைய. சேடு : அழகு. திருவெள்ளக்குளம் : வைணவத்தலம். பாற்று : சிதற அடிப்பாயாக!

94 வாம்ப ரிஉக மன்னர்தம்
உயிர்செக ஐவர்கட்கு அரசுஅளித்த
காம்பின் ஆர்திரு வேங்கடப்
பொருப்ப!நின் காதலை அருள்எனக்கு,
மாம்பொ ழில்தளிர் கோதிய
மடக்குயில் வாயது துவர்ப்புஎய்த,
தீம்ப லங்கனித் தேன்அது
நுகர்,திரு வெள்ளறை நின்றானே! சரு

95 வெருவாதாள் வாய்வெருவி 'வேங்கடமே!
வேங்கடமே!' என்கின் றாளால்;
மருவாளால் என்குடங்கால்; வாள்நெடுங்கண்
துயில்மறந்தாள்; வண்டார் கொண்டல்
உருவாளன்; வானவர்தம் உயிராளன்;
ஒலிதிரைநீர்ப் பௌவம் கொண்ட
திருவாளன்; என்மகளைச் செய்தனகள்
எங்ஙனம்நான் சிந்திக் கேனே. சச

94 வாம்பரி: தாவும் குதிரை. உக: மாள. செக: முடிய: காம்பின்ஆர்: மூங்கில்களாலே நிறைந்த. பொருப்பு. மலை. மாம்பொழில்: மாந்தோப்பு. மடம்: இளமை. துவர்ப்பு: ஒரு சுவை.

95 வெருவுதல்: அஞ்சுதல். வாய் வெருவி: வாய் பெருகி. குடங்கால்: மடி. பௌவம்: கடல். (இது தாயார் பாசுரம்)

96 சிந்தனையை, தவநெறியை,
திருமாலை, பிரியாது
வந்துஎனது மனத்துஇருந்த
வடமலையை, வரிவண்டுஆர்
கொந்துஅணைந்த பொழில்கோவல்
உலகுஅளப்பான், அடிநிமிர்த்த
அந்தணனை, யான்கண்டது
அணிநீர்த்தென் அரங்கத்தே. சரு

97 மான்கொண்ட தோல்மார்வில்
மாணியாய் மாவலிமண்
தான்கொண்டு தாளால்
அளந்த பெருமானை,
தேன்கொண்ட சாரல்
திருவேங் கடத்தானை,
நான்சென்று நாடி
நறையூரில் கண்டேனே, சசு

96 வரி வண்டு ஆர் : கோடு படர்ந்த வண்டுகள் படிந்த. கொந்து: பூங்கொத்து. அணைந்த: நெருங்கிய. கோவல்: திருக்கோவலூர்.

97 மான் கொண்ட தோல் : மானின் தோலைப் போட்டுக் கொண்ட. நறையூர் : குடந்தைக்கு அணித்தேயுள்ள நாச்சியார் கோயில் என்னும் திருப்பதி.

98 ஆங்கு வெந்நர கத்துஅழுந் தும்போது
அஞ்சேல் என்றுஅடி யேனை,ஆங் கேவந்து
தாங்கு தாமரை அன்னபொன் னார்அடி
எம்பி ரானை,உம் பர்க்குஅணி யாய்நின்ற
வேங்க டத்துஅரி யை,பரி கீறியை,
வெண்ணெய் உண்டு உர லினிடை யாப்புண்ட
தீங்க ரும்பினை, தேனை,நன் பாலினை
அன்றி என்மனம் சிந்தைசெய் யாதே. ௪எ

99 எங்க ளுக்குஅருள் செய்கின்ற ஈசனை,
வாச வார்குழ லாள்மலை மங்கைதன்
பங்க னைப்பங்கில் வைத்துஉகந் தான்தன்னை,
பான்மை யை,பனி மாமதி யம்தவழ்
மங்கு லை,சுட ரை,வட மாமலை
உச்சி யை,நச்சி நாம்வணங் கப்படும்
கங்கு லை,பக லை,சென்று நாடிக்
கண்ண மங்கையுள் கண்டுகொண் டேனே. ௪அ

98 வெம் : கொடிய. அணி : ஆபரணம். பரிகீறியை : குதிரை உருவாய் வந்த அசுரனைக் கிழித்தவனை. யாப்புண்ட : கட்டுண்ட.

99 வாசம் : மணம். வார் : நீண்ட. மலை மங்கை : உமையம்மை. பான்மை : தன்மை. பனிமாமதியம் : குளிர்ந்த முழுச் சந்திரன். மங்குல் : ஆகாயம். நச்சி: விரும்பி. கங்குல் : இரவு.

100 'அருவிசோர் வேங்கடம்,
நீர்மலை' என்றுவாய்
வெருவினாள்; மெய்யம்
வினவி இருக்கின்றாள்;
'பெருகுசீர்க் கண்ண
-புரம்'என்று பேசினாள்;
உருகினாள்; உள்மெலிந்
தாள்;இது என்கொலோ! சசு

101 'பண்உலாம் மென்மொழிப் பாவைமார்
பணைமுலை அணைதும் நாம்'என்று
எண்ணுவார் எண்ணம்அது ஒழித்து,நீ
பிழைத்துஉய்யக் கருதி னாயேல்,
விண்ணுளார் விண்ணின்மீது இயன்றவேங்-
-கடத்துளார், வளம்கொள் முந்நீர்
வண்ணனார் வல்லவாழ் செல்லுமா
வல்லையாய் மருவு நெஞ்சே. ருo

100 சோர்: சொரிகின்ற. நீர் மலை: திருநீர்மலை. வாய் வெருவினாள்: வாய் பிதற்றினாள். மெய்யம்: திருமெய்யம். பெருகுசீர்: சிறப்புமிக்க. (இது தாயார் பாசுரம்)

101 பண் உலாம்: இசை விளங்குகின்ற. பாவைமார்: பெண்கள். பணை: பருத்த. முந்நீர்: கடல். வல்லவாழ்: திருவல்லவாழ். மருவு: பொருந்து. (இது நெஞ்சொடு கிளத்தல்)

102 வலம்புரி ஆழியனை,
வரைஆர்திரள் தோள்தன்னை,
புலம்புரி நூலவனை,
பொழில்வேங்கட வேதியனை,
சிலம்புஇயல் ஆறுடைய
திருமாலிருஞ் சோலைநின்ற
நலம்திகழ் நாரணனை
நணுகும்கொல்?என் நன்னுதலே! ருக

103 பொன்னை, மாமணி-
-யை,அணி ஆர்ந்ததோர்
மின்னை, வேங்கடத்து
உச்சியில் கண்டுபோய்
என்னை ஆளுடை
ஈசனை, எம்பிரான்
தன்னை, யாம்சென்று
காண்டும்தண் காவிலே. ருஉ

102 வலம்புரி ஆழியனை: சங்கும் சக்கரமும் உடையவனை. வரை ஆர் திரள்: மழைபோல் திரண்ட. சிலம்பு இயல் ஆறு: சிலம்பு என்று சொல்லப்படும் நூபுரகங்கையாறு. நல் நுதல்: அழகிய நெற்றியையுடைய என்மகள். (இது தாயார் பாசுரம்)

103 அணி ஆர்ந்ததோர்: அழகுமிக்கதொரு. மின்னை: ஒளியை. தண்கா: திருத்தண்கா.

104 சொல்லாய் பைங்கிளியே!
சுடர்ஆழி வலன்உயர்த்த
மல்லார் தோள்வட வேங்கட வன்வர,
சொல்லாய் பைங்கிளியே! ௫௩

105 கண்ணன் மனத்துஉள்ளே
நிற்கவும். கைவளைகள்
என்னோ கழன்ற?
இவைஎன்ன மாயங்கள்?
பெண்ஆனோம் பெண்மையோம்
நிற்க, அவன்மேய
அண்ணல் மலையும்
அரங்கமும் பாடோமே. ௫௪

104 பைங்கிளி: பச்சைக்கிளி. வலன்: வலத்திருக்கையிலே. (இது கிளி விடுதூது)

105 பெண்மையோம்: பெண்மை உடையவர்களாயிருக்கின்றோம். மேய: தங்கிய. அண்ணல்: சிறந்த. மலை: (இங்கே) திருமலை. (இது தலைவி மொழி)

106 கள்ளத்தால் மாவலியை
மூவடிமண் கொண்டுஅளந்தான்;
வெள்ளத்தான்; வேங்கடத்தான்;
என்பரால் காணேடீ!
வெள்ளத்தான் வேங்கடத்தான்
ஏலும், கலிகன்றி
உள்ளத்தின் உள்ளே
உளன்கண்டாய் சாழலே. ருரு

107 இம்மையை, மறுமை தன்னை,
எமக்குவீ டாகி நின்ற
மெய்ம்மையை, விரிந்த சோலை
வியன்திரு அரங்கம் மேய
செம்மையை, கருமை தன்னை,
திருமலை ஒருமை யானை,
தன்மையை நினைவார் என்தன்
தலைமிசை மன்னு வாரே. ருசா

106 வெள்ளத்தான் : திருப்பாற்கடலிலே உள்ளான். ஏடீ : தோழீ. சாழல் : ஒரு வகைமகளிர் விளையாட்டு.

107 வியன் : மேன்மை. தலைமிசை : தலைமீது. மன்னுவார்: பொருந்துவார்.

108 நீரகத்தாய்! நெடுவரையின் உச்சி மேலாய்,
நிலாத்திங்கள் துண்டத்தாய்! நிறைந்த கச்சி
ஊரகத்தாய்! ஒண்துறைநீர் வெஃகா உள்ளாய்!
உள்ளுவார் உள்ளத்தாய்! உலகம் ஏத்தும்
காரகத்தாய்! கார்வானத்து உள்ளாய்! கள்வா!
காமருபூங் காவிரியின் தென்பால் மன்னு
பேரகத்தாய்! பேராதுஎன் நெஞ்சின் உள்ளாய்!
பெருமான்உன் திருவடியே பேணி னேனே. ருஎ

109 வங்கத்தால் மாமணிவந்து உந்து முந்நீர்
மல்லையாய்! மதிள்கச்சி ஊராய்! பேராய்
கொங்கத்தார் வளங்கொன்றை அலங்கல் மார்வன்
குலவரையன் மடப்பாவை இடப்பால் கொண்டான்
பங்கத்தாய்! பாற்கடலாய்! பாரின் மேலாய்!
பனிவரையின் உச்சியாய்! பவள வண்ணா!
எங்குஉற்றாய் எம்பெருமான்! உன்னை நாடி
ஏழையேன் இங்ஙனமே உழிதர் கேனே. ருஅ

108 *நீரகம்: திரு நீரகம். நெடுவரையின் உச்சி: திருவேங்கட மலையின் உச்சி. நிலாத்திங்கள்துண்டம், ஊரகம், வெஃகா, காரகம், கார்வானம், இவையனைத்தும் காஞ்சி யிலுள்ள வைணவத் திருப்பதிகள்.*

109 *வங்கம்: கப்பல். உந்துதல்: தள்ளுதல். முந்நீர்: கடல். மல்லை: திருக்கடல் மல்லை. அலங்கல்: மாலை. குலவரையன் மடப்பாவை: மலையரசன் மகளான பார்வதி தேவியார். பங்கத்தாய்: (வலது) பக்கத்திலுடையவனே.*

110 'கன்றுமேய்த்து இனிதுஉகந்த காளாய்!' என்றும்,
'கடிபொழில்சூழ் கணபுரத்துஎன் கனியே!' என்றும்,
'மன்றுஅமரக் கூத்தாடி மகிழ்ந்தாய்!' என்றும்,
'வடதிருவேங் கடம்மேய மைந்தா!' என்றும்,
'வென்றுஅசுரர் குலம்களைந்த வேந்தே!' என்றும்,
'விரிபொழில்சூழ் திருநறையூர் நின்றாய்!' என்றும்,
'துன்றுகுழல் கருநிறத்துஎன் துணையே!' என்றும்,
துணைமுலைமேல் துளிசோரச் சோர்கின் றாளே!

ருகூ

111 சீரார் திருவேங் கடமே திருக்கோவல்........ சுo

112 தென்னன் உயர்பொருப்பும் தெய்வ வடமலையும்... சுக

113 மின்னி மழைதவழும் வேங்கடத்துஎம் வித்தகனை..சுஉ

110 கடி: மணம். மன்று அமர: வீதிமுழுதும். துன்று: அடர்ந்த. துளி: கண்ணீர்த் துளி. சோர: பெருகும்படி. (இது தாயார் பாசுரம்)

111 *சீர் ஆர்: சிறப்பு நிறைந்த* (இது சிறிய திருமடல்)

112 தெய்வவடமலை: கடவுள் தன்மை வாய்ந்த வேங்கடமலை (இது பெரிய திருமடல்)

113 வித்தகன்: மேலானவன். (இதுவும் பெரிய திருமடல்)

## 7. பொய்கையாழ்வார்

114 எழுவார் விடைகொள்வார்
ஈன்துழா யானை,
வழுவா வகைநினைந்து
வைகல் — தொழுவார்
வினைச்சுடரை நந்துவிக்கும்
வேங்கடமே, வானோர்
மனச்சுடரைத் தூண்டும் மலை. க

115 வகையறு நுண்கேள்வி
வாய்வார்கள் நாளும்
புகைவிளக்கும் பூம்புனலும்
ஏந்தி,—திசைதிசையின்
வேதியர்கள் சென்றுஇறைஞ்சும்
வேங்கடமே வெண்சங்கம்
ஊதியவாய் மால்உகந்த ஊர். உ

*114* ஈன் துழாயான் : இளந்துளசியணிந்தவன் (திருமால்)
வைகல் : எப்பொழுதும். நந்துவிக்கும் : அணைக்கின்ற.

*115* வகையறு: கணக்கற்ற. கேள்வி வாய்வார்கள்: கேள்விச் செல்வர். புகைவிளக்கு: தூபதீபம். உகந்த: விரும்பிய.

116 வழிநின்று நின்னைத்
தொழுவார் வழுவா
மொழிநின்ற மூர்த்தியரே
ஆவர்—பழுதுஒன்றும்
வாராத வண்ணமே
விண்கொடுக்கும் மண்அளந்த
சீரான் திருவேங் கடம். ௩

117 வேங்கடமும் விண்ணகரும்
வெஃகாவும் அஃகாத
பூங்கிடங்கில் நீள்கோவல்
பொன்னகரும் — நான்குஇடத்தும்
நின்றான்; இருந்தான்;
கிடந்தான்; நடந்தானே
என்றால் கெடுமாம் இடர். ௪

116 வழி நின்று: நெறியில் நிலைத்து நின்று. வழுவாமொழி: மறை. சீர் : சிறப்பு.

117 அஃகாத: குன்றாத. கோவல்: திருக்கோவலூர். நின்றான், இருந்தான், கிடந்தான், நடந்தான் என்பவற்றைத் தலங்களொடு பொருத்தி நிரலாகக் கொள்க.

118 படைஆரும் வாட்கண்ணார்
பாரசிநாள் பைம்பூம்
தொடையலோடு ஏந்திய
தூபம் — இடைஇடையின்
மீன்மாய மாசூணும்
வேங்கடமே மேல்ஒருநாள்
மான்மாய எய்தான் வரை. ரு

119 ஊரும் வரிஅரவம்,
ஒண்குறவன் மால்யானை
பேர எறிந்த
பெருமணியை — கார்உடைய
மின்என்று புற்றுஅடையும்
வேங்கடமே மேல்அசுரர்
என்என்ற மாலது இடம். சா

118 படைஆரும்: வேல்போன்ற. பாரசி நாள்: துவாதசியன்று. பைம்பூந்தொடையல்: பசிய (வாடாத) மலர்களைக் கொண்டு தொடுத்தமாலை. மீன்: நட்சத்திரம். மான் (இங்கே) மாரிசன்.

119 ஊரும்: திரிகின்ற. மால் யானை: பெரிய யானை. பேர: அப்பால் போக.

120 இடந்தது பூமி;
எடுத்தது குன்றம்;
கடந்தது கஞ்சனை முன்
அஞ்ச; — கிடந்ததும்
நீர்ஓத மாகடலே;
நின்றதுவும் வேங்கடமே;
பேர்ஓத வண்ணர் பெரிது. எ

121 பெருவில் பகழிக்
குறவர்கைச் செந்தீ
வெருவிப் புனம்துறந்த
வேழம் — இருவிசும்பில்
மீன்வீழக் கண்டுஅஞ்சும்
வேங்கடமே மேல்அசுரர்
கோன்வீழக் கண்டுஉகந்தான் குன்று. அ

120 இடந்தது: கொம்பால் குத்தி எடுத்தது. கடந்தது: முடியச்செய்தது. கிடந்தது: கண் வளர்ந்தது. ஓதம் நீர் மாகடல்: பெரு வெள்ளமுடைய திருப்பாற்கடல். பெரிது நின்றது: பெருமையெல்லாம் தோற்றநின்றது.

121 பெருவில்: பெரியவில். பகழி: அம்பு. வெருவி: அஞ்சி. புனம்துறந்த: கொல்லையை விட்டு நீங்கின. வேழம்: யானை. இருவிசும்பு: பரந்த வான். மீன்: நட்சத்திரம்.

122 உணர்வார்ஆர் உன்பெருமை?
ஊழிதோறு ஊழி
உணர்வார்ஆர் உன்உருவம்
தன்னை? — உணர்வார்ஆர்
விண்ணகத்தாய்! மண்ணகத்தாய்!
வேங்கடத்தாய்! நால்வேதப்
பண்ணகத்தாய் நீகிடந்த பால்? கூ

123 உளன்கண்டாய் நன்னெஞ்சே!
உத்தமன் என்றும்
உளன்கண்டாய்; உள்ளுவார்
உள்ளத்து — உளன்கண்டாய்,
வெள்ளத்தின் உள்ளானும்
வேங்கடத்து மேயானும்
உள்ளத்தின் உள்ளான்என்று ஓர். க0

122 ஊழிதோறு ஊழி: ஊழிக்காலமுள்ளளவும். நீ கிடந்த பால்: நீ பள்ளிகொண்டிருக்கப்பெற்ற திருப்பாற்கடல்.

123 உள்ளுவார்: நினைப்பார். வெள்ளம்: (இங்கே) பாற்கடல்.

# 8. பூதத்தாழ்வார்

124 சென்றது இலங்கைமேல்
செவ்வேதன் சீற்றத்தால்,
கொன்றது இராவணனைக்
கூறும்கால் — நின்றதுவும்
வேய்ஓங்கு தண்சாரல்
வேங்கடமே விண்ணவர்தம்
வாய்ஓங்கு தொல்புகழான் வந்து. க

125 மனத்துள்ளான்; வேங்கடத்தான்;
மாகடலான்; மற்றும்
நினைப்புஅரிய நீள்அரங்கத்து
உள்ளான்; — எனைப்பலரும்
தேவாதி தேவன்
எனப்படுவான்; முன்ஒருநாள்
மாவாய் பிளந்த மகன். உ

124 *செவ்வே: நேராக. வாய் ஓங்கு: வாயினால் பாட ஓங்கிய.*

125 *மாகடல்: (இங்கே) திருப்பாற்கடல். மாவாய் : குதிரை உருக்கொண்டு வந்த கேசியின் வாயை. மகன் : சிறு பிள்ளை. (கண்ணன்)*

126 துணிந்தது சிந்தை
துழாய்அலங்கல், அங்கம்
அணிந்தவன்பேர் உள்ளத்துப்
பல்கால்; — பணிந்ததுவும்
வேய்பிறங்கு சாரல்
விறல்வேங் கடவனையே;
வாய்திறங்கள் சொல்லும் வகை. ௩

127 உளதுஎன்று இறுமாவார்;
உண்டு,இல்லை என்று
தளர்தல் அதன்அருகும்
சாரார்; — அளவுஅரிய
வேதத்தான், வேங்கடத்தான்;
விண்ணோர் முடிதோயும்
பாதத்தான் பாதம் பயின்று. ௪

126 அலங்கல்: மாலை. பல்கால்: பல முறை. வேய் பிறங்கு சாரல்: மூங்கில் மிக்கிருக்கும் தாழ்வரை. திறம்: தன்மை.

127 இறுமாவார்: செருக்கடைய மாட்டார். சாரார்: அடையார். பயின்று: பழகி.

128 நெறிஆர் குழல்கற்றை
முன்னின்று பின்தாழ்ந்து
அறியாது இளங்கிரிஎன்று
எண்ணி,—பிரியாது
பூங்கொடிகள் வைகும்
பொருபுனல் குன்றுஎன்றும்
வேங்கடமே யாம்விரும்பும் வெற்பு. ரு

129 வெற்புஎன்று இருஞ்சோலை
வேங்கடம்என்று இவ்இரண்டும்
நிற்புஎன்று நீமதிக்கும்
நீர்மைபோல் — நிற்புஎன்று
உளம்கோயில் உள்ளம்வைத்து
உள்ளினேன், 'வெள்ளத்து
இளங்கோயில் கைவிடேல்' என்று. சு

128 நெறிஆர்: (அடியார்களின்) வழியில் கிடக்கும். இளங்கிரி: சிறிய மலை. பிறியாது, எதுகை நோக்கித்திரிந்தது. பொருபுனல் : அலையெறியும் நீர்நிலை. வெற்பு : மலை.

129 வெற்பு : அழகர்மலை ; வேங்கடமலை. இருஞ்சோலை : திருமாலிருஞ்சோலை. நிற்பு : நிற்கும் இடம். நீர்மை : தன்மை. வெள்ளத்து இளங்கோயில் : திருப்பாற்கடலாகிய பாலாலயம்.

130 தமர்உள்ளம், தஞ்சை,
தலைஅரங்கம், தண்கால்,
தமர்உள்ளும் தண்பொருப்பு,
வேலை, — தமர்உள்ளும்
மாமல்லை, கோவல்,
மதிள்குடந்தை என்பரே
ஏவல்ல எந்தைக்கு இடம். எ

131 போதுஅறிந்து வானரங்கள்
பூஞ்சுனைபுக்கு, ஆங்குஅலர்ந்த
போதுஅரிந்து கொண்டுஏத்தும்
போது,உள்ளம் — போதும்
மணிவேங் கடவன்
மலர்அடிக்கே செல்ல
அணிவேங் கடவன்பேர் ஆய்ந்து. அ

130 தமர்: அடியார். தண்பொருப்பு: குளிர்ந்த திருமலை. ஏ: அம்பு.

131 போது: 1. விடியற்காலம். 2. பூ. 3. பொழுது. 4. வரும். அணி: அழகிய. ஆய்ந்து: ஆராய்ந்து.

132 பெருகும் மதவேழம்
 மாப்பிடிக்கு முன்நின்று
இருகண் இளமூங்கில்
 வாங்கி — அருகுஇருந்த
தேன்கலந்து நீட்டும்
 திருவேங் கடம்கண்டீர்,
வான்கலந்த வண்ணன் வரை. ௯௨

*132* பெருகும் : பெருகுகின்ற. மதவேழம் : மதம் கொண்ட ஆண் யானை. மாப்பிடி : பெண் யானை. கண் : கணு. வான்கலந்த : மேகத்தோடு பொருந்திய. வரை : மலை.

"உருகு காதலில் தழைகொண்டு
 மழலைவண்டு ஓச்சி,
முருகு நாறுசெங் தேனினை
 முழைநின்றும் வாங்கி,
பெருகு சூல்இளம் பிடிக்கு,ஒரு
 பிறைமருப்பு யானை,
பருக வாயினில் கையினின்றும்
 அளிப்பது பாராய்!"

என்ற கம்பராமாயணப் பாடல் இதனோடு பெரிதும் ஒத்த கருத்துடையது.

## 9. பேயாழ்வார்

133 மால்பால் மனம்சுழிப்ப,
மங்கையர்தோள் கைவிட்டு
நூல்பால் மனம்வைக்க
நொய்விதாம், — நால்பால
வேதத்தான், வேங்கடத்தான்,
விண்ணோர் முடிதோயும்
பாதத்தான், பாதம் பணிந்து. க

134 சிறந்தஎன் சிந்தையும்
செங்கண் அரவும்
நிறைந்தசீர் நீள்கச்சி
உள்ளும் — உறைந்ததுவும்
வேங்கடமும் வெஃகாவும்
வேளுக்கைப் பாடியுமே
தாம்கடவார் தண்துழா யார். உ

*133 மால்பால் : திருமாலிடத்தில். சுழிப்ப : பொருந்த. நூல் : சாத்திரம். நொய்விதாம் : எளிதாம்.*

*134 அரவு (இங்கே) ஆதிசேடன். கச்சி : காஞ்சிபுரம். வெஃகா : திருவெஃகா. வேளுக்கைப்பாடி: திருவேளுக்கை. கடவார்: நீங்கார்.*

135 சேர்ந்த திருமால்
கடல்,குடந்தை, வேங்கடம்
நேர்ந்தஎன் சிந்தை,
நிறைவிசும்பு, — வாய்ந்த
மறைபா டகம்,அனந்தன்,
வண்துழாய்க் கண்ணி,
இறைபாடி ஆய இவை. ௩

136 பாற்கடலும் வேங்கடமும்
பாம்பும் பனிவிசும்பும்
நூற்கடலும் நுண்நூல
தாமரைமேல் — பால்பட்டு
இருந்தார் மனமும்
இடமாகக் கொண்டான்
குருந்துஒசித்த கோபா லகன் ௪

135 நேர்ந்த: நேர்ப்பட்ட. விசும்பு: ஆகாயம். வாய்ந்த: அமைந்த. இறைபாடி: இராசதானி.

136 நூல்கடல்: கடல்போன்ற சாத்திரங்கள். நுண்: நுண்ணிய. நூல தாமரை: நூல்தண்டையுடைய கமலம்.

137 இறையாய் நிலனாகி
எண்திசையும் தானாய்
மறையாய் மறைப்பொருளாய்
வானாய் — பிறைவாய்ந்த
வெள்ளத்து அருவி
விளங்குஒலிநீர் வேங்கடத்தான்
உள்ளத்தின் உள்ளே உளன். ரு

138 உளன்கண்டாய் நன்னெஞ்சே!
உத்தமன் என்றும்
உளன்கண்டாய்; உள்ளுவார்
உள்ளத்து — உளன்கண்டாய்;
விண்ஒடுங்கக் கோடுஉயரும்
வீங்குஅருவி வேங்கடத்தான்
மண்ஒடுங்கத் தான்அளந்த மன். சா

*137 பிறைவாய்ந்த: சந்திரமண்டலத்தை அளாவிய. வெள்ளம் அருவி : மிக்க நீரையுடைய அருவிகள்.*

*138 கோடு : சிகரம். வீங்கு : நிறைந்த. மன்: இறைவன.*

139 புரிந்து மதவேழம்
மாப்பிடியோடு ஊடித்
திரிந்து சினத்தால்
பொருது — விரிந்தசீர்
வெண்கோட்டு முத்துஉதிர்க்கும்
வேங்கடமே மேல்ஒருநாள்
மண்கோட்டுக் கொண்டான் மலே. எ

140 தெளிந்த சிலாதலத்தின்
மேல்இருந்த மந்தி
அளிந்த கடுவனையே
நோக்கி — விளங்கிய
வெண்மதியம் தா,என்னும்
வேங்கடமே மேல்ஒருநாள்
மண்மதியில் கொண்டுஉகந்தான் வாழ்வு. அ

139 புரிந்து : கலவி செய்து. வெண்கோடு : வெளுத்த கொம்பு. கோடு: கோரப்பல்.

140 சிலாதலம் : கற்பாறை. மந்தி: பெண்குரங்கு. அளிந்த : அன்புகொண்ட. கடுவன் : ஆண் குரங்கு. மண்: பூமி. மதியின் : புத்தியால். வாழ்வு : வாழும் இடம்.

141
பண்டுஎல்லாம் வேங்கடம்,
பாற்கடல், வைகுந்தம்,
கொண்டுஅங்கு உறைவார்க்குக்
கோயில்போல் — வண்டு
வளம்கிளரும் நீள்சோலை
வண்பூங் கடிகை,
இளங்குமரன் தன்,விண் ணகர். ௯

142
விண்ணகரம், வெஃகா,
விரிதிரைநீர் வேங்கடம்,
மண்ணகரம், மாமாட
வேளுக்கை — மண்ணகத்த
தென்குடந்தை, தேன்ஆர்
திருவரங்கம், தென்கோட்டி,
தன்குடங்கை நீர்ஏற்றான் தாழ்வு. ௧0

*141* வளம்கிளரும் : வளமைமிக்க. வண் : அழகு. கடிகை : திருக்கடிகாசலம். இளங்குமரன் : என்றும் இளமையான இறைவன்.

*142* தென்கோட்டி : திருக்கோட்டியூர். குடங்கை : உள்ளங்கை. தாழ்வு: தங்குமிடம்.

143 தாழ்சடையும் நீள்முடியும்
ஒண்மழுவும் சக்கரமும்
சூழ்அரவும் பொன்நாணும்
தோன்றுமால் — சூழும்
திரண்டுஅருவி பாயும்
திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்ருய் இசைந்து. கக

144 பார்த்த கடுவன்
சுனைநீர் நிழல்கண்டு
பேர்த்துஓர் கடுவன்எனப்
பேர்ந்து — கார்த்த
களங்கனிக்குக் கைநீட்டும்
வேங்கடமே மேல்நாள்
விளங்கனிக்குக் கன்றுஎறிந்தான் வெற்பு. கஉ

143 (சங்கரநாராயணர்) தாழ்சடை, ஒண்மழு, சூழ்அரவு, சிவச்சின்னங்கள். நீள்முடி, சக்கரம், பொன்நாண், திருமால் அடையாளங்கள். திருமலை மேல் நிற்கும் எந்தை, சிவனும் திருமாலும் ஒன்று சேர்ந்த வடிவமாகக் காட்சியளிக்கின்ருன் ஆழ்வாருக்கு.

144 பேர்த்து: நிலைகலங்கி. கார்த்த: கரிய. விளங்கனிக்குக் கன்று எறிந்தான்: அசுரத்தன்மை கொண்ட விளாம் பழங்கள் உதிர்வதற்காக கன்றுவடிவான அசுரனை வீசி எறிந்த பெருமான்.

145 வெற்புஎன்று வேங்கடம்
பாடும்; வியன்துழாய்,
கற்புஎன்று சூடும்
கருங்குழல்மேல் — மற்பொன்ற
நீண்டதோள் மால்கிடந்த
நீள்கடல்நீர் ஆடுவான்
பூண்டநாள் எல்லாம் புகும். கரு

146 புகுமதத்தால் வாய்பூசிக்
கீழ்தாழ்ந்து அருவி
உகுமதத்தால் கால்கழுவிக்
கையால் — மிகுமதத்தேன்
விண்டமலர் கொண்டு
விறல்வேங் கடவனையே
கண்டு வணங்கும் களிறு. கச

145 கற்பு : குலமரியாதை. மல் : மல்லர்கள். பூண்டநாள் எல்லாம் : விடிந்த விடிவுகள் தோறும். புகும் : புறப்படும். (இது தாயார் பாசுரம்)

146 புகு : புகுகின்ற. வாய்பூசி: வாய்கொப்பளித்து. உகுதல்: பெருகுதல். விண்ட : மலர்ந்த. விறல் : மிடுக்கு.

147 களிறு முகில்குத்தக்
கைஎடுத்து ஓடி
ஒளிறு மருப்பொசிகை
யாளி — பிளிறி
விழ,கொன்று நின்றுஅதிரும்
வேங்கடமே மேனாள்
குழக்கன்று கொண்டுஎறிந்தான் குன்று. கரு

148 குன்றுஒன்றின் ஆய
குறமகளிர் கோல்வளைக்கை
சென்றுவிளை ஆடும்
தீங்கழைபோய் — வென்று
விளங்குமதி கோள்விடுக்கும்
வேங்கடமே மேலை
இளங்குமரர் கோமான் இடம். கசா

147 ஒளிறு: விளங்குகின்ற. மருப்பு: கொம்பு. ஒசித்தல்: முறித்தல். குழக்கன்று: இளங்கன்று.

148 கோல்வளை: அழகியவளைகள். கழை: மூங்கில். மதிகோள் சந்திரகிரகணம்.

149 இடம்வலம்ஏழ் பூண்ட
இரவித்தேர் ஓட்டி
வடமுக வேங்கடத்து
மன்னும் — குடம்நயந்த
கூத்தனாய் நின்றான்
குரைகழலே கூறுவதே
நாத்தன்னால் உள்ள நலம். கஎ

150 சார்ந்துஅகடு தேய்ப்பத்
தடாவியகோட்டு உச்சிவாய்
ஊர்ந்துஇயங்கும் வெண்மதியின்
ஒண்முயலை — சேர்ந்து
சினவேங்கை பார்க்கும்
திருமலையே, ஆயன்
புனவேங்கை நாறும் பொருப்பு. கஅ

149 ஏழ்பூண்ட: ஏழுகுதிரைகளைப் பூண்ட. குடம் நயந்த கூத்தன்: ஆசையுடன் குடக்கூத்தாடின கண்ணபிரான். குரைகழல்: ஆபரணம் ஒலிக்கின்ற திருவடி.

150 சார்ந்து: கிட்டி. அகடுதேய்ப்ப: கீழ்வயிறு உராயும்படி. உச்சிவாய்: உச்சியிலே. ஒண்முயல்: அழகிய முயலை (களங்கத்தை.)

151 முடிந்த பொழுதில்
குறவாணர், ஏனம்
படிந்துஉழுசால் பைந்தினைகள்
வித்த, — தடிந்துஎழுந்த
வேய்ங்கழைபோய் விண்திறக்கும்
வேங்கடமே மேல்ஒருநாள்
தீங்குழல்வாய் வைத்தான் சிலம்பு. கக

*151* முடிந்த பொழுது : மரணம் அடையும் நிலையில். ஏனம் : காட்டுப்பன்றி. பை : பசிய. வித்த : விதைக்க. தடிந்து : அறுத்து. சிலம்பு : மலை.

# 10. நம்மாழ்வார்

152 காண்கின் றனகளும் கேட்கின்
றனகளும் காணில்,இந்நாள்
பாண்குன்ற நாடர் பயில்கின்
றன,இதுஎல் லாம்அறிந்தோம் ;
மாண்குன்றம் ஏந்தி,தண் மாமலே
வேங்கடத்து உம்பர்நம்பும்
சேண்குன்றம் சென்று பொருள்படைப்-
பான்கற்ற திண்ணனவே. க

153 மாயோன் வடதிரு வேங்கட
நாட,வல் லிக்கொடிகாள் !
நோயோ உரைக்கிலும் கேட்கின்றி
லீர்!உரை யீர்!நுமது
வாயோ அதுஅன்றி வல்வினே
யேனும் கிளியும்எள்கும்
ஆயோ அடும்தொண்டை யோ,அறை
யோ,இது அறிவரிதே. உ

152 காணில்: ஆராயுமிடத்து. பாண்குன்றநாடர்: இசையறிந்த திருவேங்கடமுடையார். மாண்: மாட்சிமை தங்கிய. நம்பும்: விரும்பப்படுகிற. திண்ணனவு: வலிமையின் செயல். (தலைவன் பொருள்வயிற் பிரிதலைக் குறிப்பாலறிந்த தலைவி தோழிக்குக் கூறுவது இது.)

153 வடதிருவேங்கடநாட: வடதிருவேங்கடமலையை இடமாக உடைய. வல்லிக்கொடிகாள்: பூங்கொடிபோன்ற இளம் பெண்களே. எள்கும்: தளரும். ஆயோ: 'ஆயோ' என்னும் சொல்லோ? தொண்டையோ: உதடுகளோ. (சிவந்த) அடும்: கொல்லும். அறையோ: முறையிட்டு வார்த்தை (இது தலைவன் மொழி)

154 'கயலோ நுமகண்கள்?' என்று
களிறு வினவிநிற்றீர்,
அயலோர் அறியிலும் ஈதென்ன
வார்த்தை! கடல்கவர்ந்த
புயலோடு உலாம்கொண்டல் வண்ணன்
புனவேங் கடத்துஎம்மொடும்
பயலோ இலீர்;கொல்லேக் காக்கின்ற
நாளும் பலபலவே. ௩

155 இசைமின்கள் தூதுஎன்று இசைத்தால்
இசையிலம்; என்தலைமேல்
அசைமின்கள் என்றால் அசையும்கொ-
-லாம்,அம்பொன் மாமணிகள்
திசைமின் மிளிரும் திருவேங்-
-கடத்துவன் தாள்சிமயம்
மிசைமின் மிளிரிய போவான்,
வழிக்கொண்ட மேகங்களே! ௪

154 களிறு வினவி நிற்றீர் : யானை (இங்கு வரக்கண்ட துண்டோ என்று) கேட்டுநிற்கின்றீர். கவர்ந்த : கொள்ளை கொண்ட. புயல் : மழை. புனம் : காடு. பயலோ இல்லீர் : பாகமுடையீரல்லீர்.

( தலைவனை நோக்கித் தோழி மொழிதல் )

155 இசைமின்கள் : சொல்லுங்கள். இசையிலம் : உடன் பட்டுச் செல்லக் காண்கிறோமில்லை. அசைமின்கள் : பொருந்துங்கள். அசைதல் : செல்லுதல். சிமயம்மிசை : சிகரத்தின் மேலே. மின் மிளிரிய போவான் : மின்னல்கள் விளங்கச் செல்லும் பொருட்டு.

( தலைவி மேகங்களைத் தூது போக்குதல்)

156 ஒள்நுதல் மாமை ஒளிபய
வாமை விரைந்துநம்தேர்
நண்ணுதல் வேண்டும் வலவ!
கடாகின்று; தேன்நவின்ற
விண்முதல் நாயகன் நீள்முடி
வெண்முத்த வாசிகைத்தாய்
மண்முதல் சேர்வுற்ற அருவிசெய் -
-யாநிற்கும் மாமலைக்கே. ௫

157 முலையோ முழுமுற்றும் போந்தில;
மொய்பூம் குழல்குறிய;
கலையோ அரைஇல்லை; நாவோ
குழறும்; கடல்மண்எல்லாம்
விலையோ எனமிளி ரும்கண்
இவள்பர மே!பெருமான்
மலையோ திருவேங் கடம்என்று
கற்கின்ற வாசகமே. ௬

156 ஒள்நுதல்: அழகிய நெற்றியையுடையாள். மாமை: ஒளி. பயவாமை: மேனிநிறம் பசப்படையாதபடி. வலவ! கடாகின்று: சாரதி! செலுத்துக. நண்ணுதல்: சேரல். தேன்நவின்ற: வண்டுகள் பாடப்பெற்ற. வாசிகைத்தாய்: தன்மையதாய். (பிரிந்த தலைவன் திரும்புங்கால் தேரை விரைந்து செலுத்தக்கூறல்)

157 போந்தில: வெளித் தோன்றின அல்ல. குறிய: குட்டையுள்ளன. கலை: ஆடை. அரை: இடை. விலையோ என: விலைப்பொருளென. மிளிரும்: பிறழும்.

(தலைமகளின் இளமைநோக்கித் தாய் பேசுதல்)

158 காவியும் நீலமும் வேலும்
கயலும் பலபலவென்று
ஆவியின் தன்மை அளவுஅல்ல
பாரிப்பு; அசுரர்ச்செற்ற
மாவியம் புள்வல்ல மாதவன்,
கோவிந்தன் வேங்கடம்சேர்
தூவிஅம் பேடைஅன் னள்,கண்கள்
ஆய துணைமலரே. எ

159 உறுகின்ற கன்மங்கள் மேலான;
ஓர்ப்பில ராய்,இவளைப்
பெறுகின்ற தாயார்மெய்ந் நொந்து
பெறார்கொல்? துழாய்குழல்வாய்த்
துறுகின் றிலர்;தொல்லை வேங்கடம்
ஆட்டவும் சூழ்கின்றிலர்;
இறுகின்ற தால்இவள் ஆகம்,மெல்
ஆவி எரிகொள்ளவே. அ

158 காவி: செங்கழுநீர்ப்பூ. நீலம்: கருநெய்தல்பூ. பாரிப்பு: (என்னை வருத்துவதற்கு அடிகோலிய) பரப்பு. செற்ற: அழித்த. மாவியம்புள்: பெரிய ஆச்சரியமான கருடன். வல்ல: ஏறிநடத்துகிற. தூவி: இறகு. அம்பேடை: அழகிய பெண் அன்னம்.
(தலைவன் தன் ஆற்றாமையைத் தோழனிடம் கூறல்)

159 உறுகின்ற: (இவள் தாய்மார்விடாமல்) பொருத்திநடத்துகிற. கன்மங்கள்: (வெறியாட்டு) காரியங்கள். மேலான: மேன்மேலும் உண்டாகா நின்றன. ஓர்ப்பு: ஆய்வு. மெய்: உடம்பு. துறுகின்றிலர்: சூட்டுகின்றாரல்லர். ஆட்டவும்: சேர்க்கவும். இறுதல்: அற்றுப்போதல்.
(வெறிவிலக்கத் தொடங்கிய தோழி கூற்று)

160 கண்ணா வான்என்றும்
மண்ணோர் விண்ணோர்க்கு ;
தண்ணார் வேங்கட
விண்ணோர் வெற்பனே. ௯

161 எந்தாய்! தண்திரு வேங்கடத்துள் நின்றாய்!
இலங்கை செற்றாய்! மராமரம்
பைந்தாள் ஏழ்உருவ ஒருவாளி
கோத்த வில்லா !
கொந்துஆர் தண்ணந் துழாயினாய்! அமுதே!
உன்னை என்னுள்ளே குழைத்தஎம்
மைந்தா! வான்ஏறே!
இனிஎங்குப் போகின்றதே? ௧0

160 கண்ணாவான்: கண்ணாயிருப்பவன். என்றும்: எப்போதும். தண்ஆர் : குளிர்ச்சி நிறைந்த. வெற்பன் : திருமலையான். (வேங்கடவன்)

161 செற்றாய் : அழித்தவனே. பைந்தாள் : பருத்த அடிகள். கொந்துஆர் : கொத்துக்கள் நிறைந்த. குழைத்த : கலந்த.

162 போகின்ற காலங்கள் போய காலங்கள்
போகு காலங்கள் தாய்தந்தை,உயிர்
ஆகின்ருய்! உன்னைநான்
அடைந்தேன் விடுவேனே?
பாகின்ற தொல்புகழ் மூவுலகுக்கும்
நாதனே! பரமா! தண்வேங்கடம்
மேகின்ருய்! தண் துழாய்
விரைநாறு கண்ணியனே! கக

163 பற்ப நாபன்; உயர்வுஅற
உயரும் பெரும்திறலோன்;
எற்பரன்; என்னை ஆக்கிக்கொண்டு
எனக்கே தன்னைத்தந்த
கற்பகம்; என்அமுதம்; கார்முகில்
போலும் வேங்கடநல்
வெற்பன்; விசும்போர் பிரான்;எந்தை
தாமோ தரனே. கஉ

162 போகின்றகாலம் : நிகழ் காலம். போயகாலம் : இறந்த காலம். போகுகாலம் : எதிர் காலம். பாகின்ற : பரவுகின்ற. விரை : மணம்.

163 திறலோன் : வன்மையுடையான். எற்பரன் : என் கடவுள். "என்னை ஆக்கிக்கொண்டு எனக்கே தன்னைத் தந்த கற்பகம்" என்ற கருத்து, "தந்தது உன் தன்னை; கொண்டது என் தன்னை" என்ற திருவாசகத்தோடு ஒப்பது.

164 ஒழிவில் காலம்எல்லாம்
உடனாய் மன்னி
வழுவிலா அடிமை
செய்ய வேண்டும்நாம்;
தெழிகு ரல்அரு-
வித்திரு வேங்கடத்து
எழில்கொள் சோதி
எந்தைதந்தை தந்தைக்கே. கங

165 எந்தை தந்தை
தந்தை தந்தைக்கும்
முந்தை, வானவர்
வானவர் கோனொடும்
சிந்துபூ மகிழும்
திருவேங் கடத்து
அந்தம் இல்புகழ்க்
கார்எழில் அண்ணலே. கச

164 ஒழிவுஇல்: ஓய்வில்லாத. உடன்: கூட. மன்னி: நிலைத்து. வழு: குற்றம். தெழிகுரல்: கம்பீரமான ஓசை.

165 எந்தை... முந்தை: எம்குலநாதன். சிந்து: தூவின. அந்தம்இல்: முடிவில்லாத.

166 அண்ணல் மாயன்;
அணிகொள்செந் தாமரைக்
கண்ணன்; செங்கனி
வாய்க்கரு மாணிக்கம்;
தெள்நி றைச்சுனை
நீர்த்திரு வேங்கடத்து
எண்இல் தொல்புகழ்
வானவர் ஈசனே. கரு

167 ஈசன் வானவர்க்கு
என்பன்;என் ருல்அது
தேச மோ,திரு
வேங்கடத் தானுக்கு?
நீச னேன்,நிறைவு
ஒன்றும்இ லேன்,என்
பாசம் வைத்த
பரஞ்சுடர்ச் சோதிக்கே. கசா

166 அண்ணல்: தலைவன். தெள்நிறை: தெளிவையும் நிறைவையும் உடைய. எண்இல்: எண்ணிறந்த.

167 என்பன்: என்று சொல்லுவேன். தேசமோ: பெருமையயோ. நீசனேன்: கடைகெட்டவன். நிறைவு: குணம். என்கண்: என்னிடத்தில்.

168 சோதி யாகிஎல்-
லாஉல கும்தொழும்
ஆதி மூர்த்திஎன்-
ருல்அளவு ஆகுமோ?
வேதி யர்முழு
வேதத்து அமுதத்தை,
தீதில் சீர்த்திரு
வேங்கடத் தானையே. கஎ

169 வேம்க டங்கள்;மெய்ம்
மேல்வினை முற்றவும்
தாங்கள் தங்கட்கு
நல்லன வேசெய்வார்,
வேங்க டத்துஉறை-
வார்க்கு 'நம'என்ன
லாம்க டமை,அ-
துசுமந் தார்கட்கே. கஅ

168 சோதிஆகி: ஒளிமயமான திருமேனியுடையனாய். அளவு: பெருமை.

169 வேம்: வெந்துபோம். கடங்கள்: அனுபவித்தே தீர வேண்டிய பாவங்கள். தாங்கள்: அடியார்கள். நம: வணக்கம். சுமந்தார்கட்கு: ஏற்பவர்கட்கு.

170 சுமந்து மாமலர்
நீர்சுடர் தீபம்கொண்டு
அமர்ந்து வானவர்
வானவர் கோனொடும்
நமன்றுஎ ழும்திரு
வேங்கடம் நங்கட்கு,
சமன்கொள் வீடு
தரும்தடம் குன்றமே. கக

171 குன்றம் ஏந்திக்
குளிர்மழை காத்தவன்;
அன்று ஞாலம்
அளந்த பிரான்;பரன்;
சென்று சேர்திரு-
வேங்கட மாமலை
ஒன்று மேதொழ
நம்வினை ஓயுமே. உ0

170 சுமந்து : ஏந்தி. மா : சிறந்த. நமன்று : வணங்கி. எழும் : எழுச்சியடையும் இடமான. சமன்கொள்வீடு : சமமான கைங்கரிய மோக்கம்.

171 குன்றம் : கோவர்த்தனமலை. ஞாலம் : உலகம். பிரான் : தலைவன். பரன் : எம்பெருமான்.

172 ஓயும் மூப்புப்
பிறப்புஇறப் புப்பிணி,
வீயு மாறுசெய்-
வான்திரு வேங்கடத்து
ஆயன் நாள்மல-
ராம்அடித் தாமரை
வாயுள் ளும்,மனத்து
உள்ளும்வைப் பார்கட்கே. உக

173 வைத்த நாள்வரை
எல்லை குறுகிச்சென்று
எய்த்து இளைப்பதன்
முன்னம் அடைமினோ;
பைத்த பாம்பணை-
-யான்திரு வேங்கடம்
மொய்த்த சோலைமொய்
பூந்தடம் தாழ்வரே. உஉ

172 வீயும் : தொலையும். அடி : திருவடி.

173 வைத்த நாள் வரை எல்லை குறுகி: (இத்தனை நாட்கள் இருக்கவேண்டியது என்று) வைக்கப்பட்ட வாழ்நாளின் அளவான கடைசி எல்லையை அணுகி. பைத்த: படம் எடுத்த. மொய்த்த: நெருங்கிய. தாழ்வர் : தாழ்வரை.

174 தாள்ப ரப்பிமண்
தாவிய ஈசனை,
நீள்பொ ழில்குரு
கூர்ச்சட கோபன்சொல்,
கேழில் ஆயிரத்து
இப்பத்தும் வல்லவர்
வாழ்வர் வாழ்வுஎய்தி
ஞாலம் புகழவே. உ௩

175 வார்புனல் அந்தண் அருவி
வடதிரு வேங்கடத்து எந்தை
பேர்பல சொல்லி, பிதற்றி,
பித்தர்என் றேபிறர் கூற,
ஊர்பல புக்கும் புகாதும்
உலோகர் சிரிக்கநின்று ஆடி
ஆர்வம் பெருகிக் குனிப்பார்
அமரர் தொழப்படு வாரே. உச

174 பரப்பி: விரித்து. தாவிய: அளந்துகொண்ட. கேழ்இல்: ஒப்பற்ற. வல்லவர்: ஓதவல்லவர். வாழ்வு: நற் பெருவாழ்வு.

175 வார்புனல்: கொட்டும் நீர். குனிப்பார்: வளைந்து வளைந்து ஆடுவார். ('உத்தமன் அத்தன்' என்ற திருவா சகப் பாடல் இதனோடு பெரிதும் ஒக்கும்)

176 சொன்னால் விரோதம்இது; ஆகிலும்
சொல்லுவன் கேண்மினோ!
என்நாவில் இன்கவி யான்ஒரு-
-வர்க்கும் கொடுக்கிலேன்;
தென்னா தெனாஎன்று வண்டு
முரல்திரு வேங்கடத்து
என்னானை என்அப்பன் எம்பெரு-
மான்உளன் ஆகவே. உரு

177 வீற்றிருந்து ஏழ்உலகும் தனிக்கோல்
செல்ல, வீவுஇல்சீர்
ஆற்றல்மிக்கு ஆளும் அம்மானை,
வெம்மா பிளந்தான்தன்னை,
போற்றி என்றே கைகள்ஆரத்
தொழுது சொல்மாலைகள்
ஏற்ற நோற்றேற்கு இனிஎன்-
-னகுறை எழுமையுமே? உசா

176 தென்னாதெனா: ஒலிக்குறிப்பு. முரல்: ஒலிக்கின்ற. என்னானை: என்னுடைய யானையனையவன்.

177 தனிக்கோல்: தனியரசு. வீவுஇல்: முடிவில்லாத. வெம்மா: (இங்கே) கொடிய கேசி என்னும் குதிரை. ஏற்ற: அணிய.

178 மைய கண்ணாள்; மலர்மேல்
உறைவாள் உறைமார்பினன்;
செய்ய கோலத் தடங்கண்ணன்;
விண்ணோர் பெருமான்தன்னை
மொய்ய சொல்லால் இசைமாலைகள்
ஏத்தி உள்ளப்பெற்றேன்;
வெய்ய நோய்கள் முழுதும்
வியன்ஞாலத்து வீயவே. உஎ

179 வீவுஇல் இன்ப மிகஎல்லை
நிகழ்ந்தநம் அச்சுதன்;
வீவுஇல் சீரன்; மலர்க்கண்ணன்;
விண்ணோர் பெருமான்தன்னை,
வீவுஇல் காலம் இசைமாலைகள்
ஏத்தி மேவப்பெற்றேன்;
வீவுஇல் இன்பமிக எல்லை
நிகழ்ந்தனன் மேவியே. உஅ

178 மைய கண்ணாள் : மை எழுதப்பட்ட கண்ணையுடையாள். மலர்மேல் உறைவாள் : திருமகள். செய்ய : சிவந்த. கோலம் : அழகிய. மொய்ய : செறிந்த. வெய்ய : கொடிய. வீய : அழிய.

179 வீவுஇல் : அழிவில்லாத. மிகஎல்லை நிகழ்ந்த : இனி இதற்கு மேல் இல்லை எனலாம்படியான எல்லையிலுள்ளதாம்.

180 மேவி நின்று தொழுவார்
வினைபோக மேவும்பிரான்;
தூவி அம்புள் உடையான்;
அடல்ஆழிஅம் மான்தன்னை,
நாஇய லால்இசை மாலைகள்
ஏத்தி,நண் ணப்பெற்றேன்;
ஆவிஎன் ஆவியை யான்அறி-
யேன்செய்த ஆற்றையே. உகூ

181 ஆற்ற நல்ல வகைகாட்டும்
அம்மானை, அமரர்தம்
ஏற்றை, எல்லாப் பொருளும்
விரித்தானை, எம்மான்தன்னை,
மாற்றம்மாலை புனைந்துஏத்தி,
நாளும் மகிழ்வுஎய்தினேன்;
காற்றின் முன்னம் கடுகி
வினைநோய்கள் கரியவே. ௩௦

180 *மேவும் : கலக்கும். தூவி : சிறகு. அடல் : போர்வல்ல. நாஇயலால் : நாவின் தொழிலாலே. நண்ண : கிட்ட. ஆற்றை : விதத்தை.*

181 *ஆற்ற : மிக்க. மாற்றம் மாலைபுனைந்து : சொல்மாலையைத் தொடுத்து. கடுகி : ஓடி. கரிய : வெந்துபோம்படி.*

182 கரிய மேனிமிசை வெளிய
நீறுசிறி தேஇடும்
பெரிய கோலத் தடங்கண்ணன்
விண்ணோர் பெருமான்
உரிய சொல்லால் இசைமாலைகள்
ஏத்திஉள்ளப் பெற்றேற்கு
அரியது உண்டோ? எனக்குஇன்று
தொட்டும்இனி என்றுமே. ருக

183 என்றும் ஒன்றாகி ஒத்தாரும்
மிக்கார்களும் தன்தனக்கு இன்றி
நின்றானை, எல்லா உலகும்
உடையான் தன்னை,
குன்றம் ஒன்றால் மழைகாத்த
பிரானைச்சொல் மாலைகள்
நன்று சூட்டும் விதிஎய்தினம்;
என்ன குறைநமக்கே? ருஉ

182 கரிய மேனிமிசை : கருமையான உடம்பின் மீது. வெளிய நீறு : வெண்மையான திருநீறு.

183 ஒத்தார் : நிகரானவர். மிக்கார் : மேம்பட்டவர்.

184 நமக்கும் பூவின்மிசை நங்கைக்கும்
இன்பனை, ஞாலத்தார்
தமக்கும் வானத் தவர்க்கும்
பெருமானை, தண்தாமரை
சுமக்கும் பாதப் பெருமானை,
சொல்மாலைகள் சொல்லுமாறு
அமைக்க வல்லேற்கு இனியாவர்
நிகர்அகல் வானத்தே? ௩௩

185 வானத்தும் வானத்துள் உம்பரும்
மண்ணுள்ளும் மண்ணின்கீழ்த்
தானத்தும், எண்திசை யும்,தவி
ராதுநின் றான்தன்னை,
கூனல்சங் கத்தடக் கையவனை,
குடமாடியை, வானக்
கோனை, கவிசொல்ல வல்லேற்கு
இனி,மாறு உண்டோ? ௩௪

184 பூவின்மிசை நங்கை : மலர்மகள் (திருமகள்) நிகர் : ஒப்பு.

185 கீழ்த்தானத்தும்: பாதாள உலகத்தும். தவிராது : நீங்காது. கூனல் : வளைந்த வடிவு. மாறு : எதிர்.

186 உண்டும் உமிழ்ந்தும் கடந்தும்
இடந்தும் கிடந்தும்நின்றும்
கொண்ட கோலத் தொடுவீற்று
இருந்தும் மணம்கூடியும்
கண்ட ஆற்றல் தனக்கே
உலகுஎன நின்றான்தன்னை,
வண்தமிழ் நூற்க நோற்றேன்
அடியார்க்கு இன்பமாரியே. ௩௫

187 மாரி மாறுத தண்அம்மலை
வேங்கடத்து அண்ணலை,
வாரி மாறுத பைம்பூம்
பொழில்சூழ் குருகூர்நகர்
காரி மாறன் சடகோபன்
சொல்ஆயிரத்து இப்பத்தால்
வேரி மாறுத பூமேல்
இருப்பான் வினைதீர்க்குமே. ௩௬

186 மணம்கூடியும்: பூமிப் பிராட்டியை மணந்து கூடியும். நோற்றேன்: புண்ணியம் பண்ணினேன்.

187 மாறுத: 1. தப்பாத. 2. குறையாத. குருகூர்நகர்: ஆழ்வார் திருநகரி. காரிமாறன்: சடகோபன்: நம்மாழ்வாரின் ஏனைய பெயர்கள். வேரி: மணம்.

188 மாலுக்கு வையம்
அளந்த மணாளற்கு,
நீலக் கருநிற
மேக நியாயற்கு,
கோலச்செந் தாமரைக்
கண்ணற்கு,என் கொங்குஅலர்
ஏலக் குழலி
இழந்தது சங்கே. ௧எ

189 சங்கு,வில், வாள்,தண்டு
சக்கரக் கையற்கு,
செங்கனி வாய்ச்செய்ய
தாமரைக் கண்ணற்கு,
கொங்குஅலர் தண்அம்
துழாய்முடி யானுக்கு,என்
மங்கை இழந்தது
மாமை நிறமே. ௧அ

(இது முதல் பத்துப் பாசுரங்களும் தாயார் இரங்கும் கூற்று)

188 மாலுக்கு: திருமாலுக்கு. நியாயற்கு: ஒத்தவற்கு. கொங்குஅலர் ஏலக்குழலி: தேனொழுகும் மலர்களணிந்த நறுமணம் மிக்க கூந்தலையுடையாள். சங்கு: கைவளை.

189 சங்கு, வில், வாள், தண்டு, சக்கரம்: திருமாலின் ஐவகைப் படைகள். மாமைநிறம்: அழகிய நிறம்.

190 நிறம்கரி யானுக்கு,
நீடுஉலகு உண்ட
திறம்கினர் வாயச்சிறுக்
கள்ளன் அவற்கு,
கறங்கிய சக்கரக்
கையவ னுக்கு,என்
பிறங்குஇரும் கூந்தல்
இழந்தது பீடே. ௧௯

191 பீடுடை நான்முக-
னைப்படைத் தானுக்கு,
மாடுடை வையம்
அளந்த மணாளற்கு,
நாடுடை மன்னர்க்குத்
தூதுசெல் நம்பிக்கு,என்
பாடுடை அல்குல்
இழந்தது பண்பே. ௨0

190 நீடுஉலகு: எல்லா உலகங்களையும். கறங்கிய: சுழலும். பிறங்கு இரும்கூந்தல்: விளங்குகின்ற அடர்ந்த கூந்தலை யுடையாள். பீடு: பெருமை.

191 மாடு: செல்வம். நாடுஉடைமன்னர்: (இங்கே) அரசர் களான பாண்டவர். பாடு: பரந்த.

192 பண்புடை வேதம்
பயந்த பரனுக்கு,
மண்புரை வையம்
இடந்த வராகற்கு,
தெண்புனல் பள்ளிஎம்
தேவப் பிரானுக்கு,என்
கண்புனை கோதை
இழந்தது கற்பே. ௪௧

193 கற்பகக் காஅன
நற்பல தோளற்கு,
பொற்சுடர்க் குன்றுஅன்ன
பூந்தண் முடியற்கு
நற்பல தாமரை
நாண்மலர்க் கையற்கு,என்
விற்புரு வக்கொடி
தோற்றது மெய்யே. ௪௨

192 *பண்புஉடை: சீர்மைமிக்க. பயந்த: தந்த. மண்புரை வையம்: மண்மிக்கபூமி. கண்புனைகோதை: கண்ணைக் கவரும் கூந்தலையுடையாள்.*

193 *கா: சோலை. நாள்மலர்: அன்று அலர்ந்தமலர்.*

194 மெய்அமர் பல்கலன்
நன்குஅணிந் தானுக்கு,
பைஅர வின்அணைப்
பள்ளியி னானுக்கு,
கையொடு கால்செய்ய
கண்ணபி ரானுக்கு,என்
தையல் இழந்தது,
தன்னுடைச் சாயே. சஙு

195 சாயக் குருந்தம்
ஒசித்த தமியற்கு,
மாயச் சகடம்
உதைத்த மணாளற்கு,
பேயைப் பிணம்படப்
பால்உண் பிரானுக்கு,என்
வாசக் குழலி
இழந்தது மாண்பே. சச

194 அமர் : பொருத்தமான. பை : படம். செய்ய : சிவந்த. தையல் : மகள். சாய் : ஒளி.

195 சாய : வீழ. ஒசித்த : முறித்த. பேய் : (இங்கே) பூதனை என்னும் அரக்கி. வாசம் : வாசனை. மாண்பு: மாட்சிமை.

196 மாண்புஅமை கோலத்துஎம்
மாயக் குறளற்கு,
சேண்சுடர்க் குன்றுஅன்ன
செஞ்சுடர் மூர்த்திக்கு,
காண்பெரும் தோற்றத்துஎம்
காகுத்த நம்பிக்கு,என்
பூண்புனை மென்முலை
தோற்றது பொற்பே. ௧௯௬

197 பொற்புஅமை நீள்முடிப்
பூந்தண் துழாயற்கு,
மல்பொரு தோள்உடை
மாயப் பிரானுக்கு,
நிற்பன பல்உரு
வாய்நிற்கும் மாயற்கு,என்
கற்புடை ஆட்டி
இழந்தது கட்டே. ௧௯௭

196 சேண்: உயர்ந்த பொற்பு: அழகு.

197 கற்புடை ஆட்டி: கற்பை உடைமையாகக் கொண்டவள்.
கட்டு: எல்லாம்.

198 கட்டுஎழில் சோலைநல்
வேங்கட வாணனை,
கட்டுஎழில் தென்குரு
கூர்ச்சட கோபன்சொல்
கட்டுஎழில் ஆயிரத்து
இப்பத்தும் வல்லவர்
கட்டுஎழில் வானவர்
போகம் உண்பாரே சஎ

199 உலகம் உண்ட பெருவாயா!
உலப்பில் கீர்த்தி அம்மானே!
நிலவும் சுடர்சூழ் ஒளிமூர்த்தி!
நெடியாய்! அடியேன் ஆர்உயிரே!
திலதம் உலகுக்கு ஆய்நின்ற
திருவேங் கடத்துஎம் பெருமானே!
குலதொல் அடியேன் உன்பாதம்
கூடு மாறு கூறுயே. சஅ

198 கட்டு எழில் : (நான்கு இடத்தும்) பேரழகு.

199 பெருவாயா : பெரியவாயா. உலப்புஇல் : முடிவில்லாத. திலதம் : திலகம்.

200 கூறாய், நீறாய், நிலன்ஆகி,
கொடுவல் அசுரர் குலம்எல்லாம்
சீறா எறியும் திருநேமி
வலவா! தெய்வக் கோமானே!
சேறுஆர் சுனைத்தா மரை,செந்தீ
மலரும் திருவேங் கடத்தானே!
ஆறா அன்பில் அடியேன்உன்
அடிசேர் வண்ணம் அருளாயே. ௧௯௯

201 வண்ணம் அருள்கொள் அணிமேக
வண்ணா! மாய அம்மானே!
எண்ணம் புகுந்து தித்திக்கும்
அமுதே! இமையோர் அதிபதியே!
தெள்நல் அருவி மணி,பொன்,முத்து
அலைக்கும் திருவேங் கடத்தானே!
அண்ண லே!உன் அடிசேர
அடியேற்கு ஆ!ஆ! என்னாயே. ௨௦௦

200 கூறாய்: பலபல துண்டங்களாகி. சீறா: சீறி. நேமி: சக்கரம். சேறு ஆர்: சேறுநிரம்பிய.

201 வண்ணம் அருள்: அருளே வடிவெடுத்த வண்ணமாய். ஆஆ என்னாய்: ஐயோ என்று இரங்கி அருளவேணும்.

202 ஆ!ஆ! என்னாது உலகத்தை
அலைக்கும் அசுரர் வாழ்நாள்மேல்
தீவாய் வாளி மழைபொழிந்த
சிலையா! திருமா மகள்கேள்வா!
தேவா சுரர்கள் முனிக்கணங்கள்
விரும்பும் திருவேங் கடத்தானே!
பூவார் கழல்கள் அருவினையேன்
பொருந்து மாறு புணராயே. ருக

203 புணரா நின்ற மரம்ஏழ்அன்று
எய்த ஒருவில் வலவாவோ!
புணர்ஏய் நின்ற மரம்இரண்டின்
நடுவே போன முதல்வாவோ!
திணர்ஆர் மேகம் எனக்களிறு
சேரும் திருவேங் கடத்தானே!
திணர்ஆர் சார்ங்கத்து உன்பாதம்
சேர்வது அடியேன் எந்நாளே? ருஉ

202 ஆஆ என்னாது : இரக்கமில்லாமல். அலைக்கும் : துன்பப் படுத்தும். வாளி : அம்பு. சிலை : வில். கேள்வன் : கணவன். புணராய் : கற்பித்தருள வேண்டும்.

203 புணரா நின்ற : ஒன்றோடொன்று பிணைந்திருந்த. மரம் : (இங்கே) மராமரம். வலவா : வீரனே. திணர்: செறிவு; திண்மை.

204 'எந்நா ளேநாம் மண்அளந்த
இணைத்தா மரைகள் காண்பதற்கு'என்று
எந்நா ளும்நின்று இமையோர்கள்
ஏத்தி இறைஞ்சி இனம்இனமாய்
மெய்ந்நா மனத்தால் வழிபாடு
செய்யும் திருவேங் கடத்தானே!
மெய்ந்நான் எய்தி எந்நாள்உன்
அடிக்கண் அடியேன் மேவுவதே? ருரு

205 அடியேன் மேவி அமர்கின்ற
அமுதே! இமையோர் அதிபதியே!
கொடியா அடுபுள் உடையானே!
கோலக் கனிவாய்ப் பெருமானே!
செடியார் வினைகள் தீர்மருந்தே!
திருவேங் கடத்துஎம் பெருமானே!
நொடியார் பொழுதும் உன்பாதம்
காண நோலாது ஆற்றேனே. ருச

204 எந்நாள்: எந்த நாள். இணை: இரண்டு. தாமரை: (இங்கே) தாமரைபோன்ற திருவடிகள். இறைஞ்சி: வணங்கி. இனம் இனமாய்: கூட்டங் கூட்டமாக. மேவுவது: பொருந்துவது.

205 அடுபுள்: (பகைவரைப்) போகுக்கவல்ல கருடன். செடி ஆர் வினைகள் தீர்மருந்தே: செடிபோல் செழித்த பாபங்களைத் தீர்க்கும் மருந்தானவனே. 'செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே' என்பர் குலசேகரர். நொடி: கணம். நோலாது: நோன்புஇராது.

206 நோலாது ஆற்றேன் நுன்பாதம்
காண என்று நுண்உணர்வில்
நீலார் கண்டத்து அம்மானும்
நிறைநான் முகனும் இந்திரனும்
சேல்ஏய் கண்ணார் பலர்சூழ
விரும்பும் திருவேங் கடத்தானே!
மாலாய் மயக்கி அடியேன்பால்
வந்தாய் போலே வாராயே. ருரு

207 வந்தாய் போலே வாராதாய்!
வாரா தாய்போல் வருவானே!
செந்தா மரைக்கண், செங்கனிவாய்,
நால்தோள் அமுதே! எனதுஉயிரே!
சிந்தா மணிகள் பகர்அல்லைப்
பகல்செய் திருவேங் கடத்தானே!
அந்தோ! அடியேன் உன்பாதம்
அகல கில்லேன் இறையுமே. ருசா

206 *நீலார் கண்டத்து அம்மான் : சிவபெருமான். சேல்ஏய் : மீன் போன்ற.*

207 *பகர் : ஒளி. அல்லை : இரவை. இறையும் : சிறிதும்.*

208 'அகல கில்லேன் இறையும்'என்று
அலர்மேல் மங்கை உறைமார்பா!
நிகரில் புகழாய்! உலகம்மூன்று
உடையாய்! என்னை ஆள்வானே!
நிகரில் அமரர் முனிக்கணங்கள்
விரும்பும் திருவேங் கடத்தானே!
புகல்ஒன்று இல்லா அடியேன்உன்
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே. ௫௭

209 'அடிக்கீழ் அமர்ந்து புகுந்து,அடியீர்!
வாழ்மின்!' என்றுஎன்று அருள்கொடுக்கும்
படிக்கேழ் இல்லாப் பெருமானை,
பழனக் குருகூர்ச் சடகோபன்
முடிப்பான் சொன்ன ஆயிரத்துத்
திருவேங் கடத்துக்கு இவைபத்தும்
பிடித்தார் பிடித்தார் வீற்றிருந்து
பெரிய வானுள் நிலாவுவரே ௫௮

208 அலர்மேல் மங்கை: திருமகள். புகல்: பற்றுக்கோடு.

209 படிக்கேழ்இல்லா: ஒப்பு உயர்வு அற்ற பெருமையுடை-யானை. பழனம்: 1. வயல். 2. நீர் நிலை. பிடித்தார், பிடித்தார்: நேரடியாகவும், வழிவழியாகவும். பெரியவான்: பரமபதம். நிலவுவர்: வீற்றிருப்பர்.

210 நங்கள் வரிவளை ஆயங் களோ!
நம்முடை ஏதலர் முன்பு நாணி
நுங்கட்கு யான்ஒன்று உரைக்கு மாற்றம்
நோக்குகின் றேன்;எங்கும் காண மாட்டேன்;
சங்கம் சரிந்தன சாய் இழந்தேன்;
தடமுலை பொன்நிற மாய்த்த ளர்ந்தேன்;
வெங்கண் பறவையின் பாகன், எங்கள்
வேங்கட வாணனை வேண்டிச் சென்றே. ருக

211 இன்றிப் போக
இருவினை யும்கெடுத்து
ஒன்றி யாக்கை
புகாமைஉய் யக்கொள்வான்;
நின்ற வேங்கடம்
நீள்நிலத்து உள்ளது
சென்று தேவர்கள்
கைதொழு வார்களே. சுய

210 நங்கள் : நம்முடைய. வரி வளை ஆயங்களோ : அழகிய வளைகள் அணிந்த தோழிகளே. ஏதலர் : பகைவர். மாற்றம் : சொல். சங்கம் : கைவளைகள். சரிந்தன : கழன்றன. சாய் : மேனிஒளி. ( தலைவி தோழிகளிடம் சொல்லுதல் )

211 இன்றி : ஒழிந்து. ஒன்றி : கலந்து. ஆக்கை : உடம்பு.

212 மேயான் வேங்கடம்
காயா மலர்வண்ணன்
பேயார் முலைஉண்ட
வாயான் மாதவனே. சுகக

213 திருமால் இருஞ்சோ லைமலையே,
திருப்பாற் கடலே, என்தலையே,
திருமால் வைகுந் தமே,தண்
திருவேங் கடமே, எனதுஉடலே,
அருமா மாயத்து எனதுஉயிரே,
மனமே, வாக்கே, கருமமே,
ஒருமா நொடியும் பிரியான்என்
ஊழி முதல்வன் ஒருவனே. சுஉ

212 மேயான்: உள்ளான். காயாமலர்: காயாம்பூ. வண்ணன்: நிறத்தவன். பேயார்: பூதனை என்னும் அரக்கி.

213 திருமாலிருஞ்சோலை, திருப்பாற்கடல், திருநாடு, திருவேங்கடம் முதலாக எழுந்தருளியிருக்கிற திருத்தலங்களில் போலத் தன்னுடைய அவயவங்களிலும் இடம் பெற்றுத்திருமால் தன்னைவிட்டுப் பிரியாமல் இருக்கின்றான் என்று ஊழி முதல்வனும் ஒருவனை நுகர்ந்து சுவைத்துப் பேறு பெருகின்றார் ஆழ்வார்

# பாட்டு முதற்குறிப்பு அகராதி

# பாட்டு முதற்குறிப்பு அகராதி

# பாட்டு முதற்குறிப்பு அகராதி

# பாட்டு முதற்குறிப்பு அகராதி

உ

சிவமயம்

# திவ்வியப்பிரபந்தத் தல வணக்கம்

'தமிழ்க்கடல்' 'சிவமணி' **ராய. சொ.** இயற்றியது

திருவரங் கத்துஉறை தேவா போற்றி
உறையூர் நின்ற ஒருவ போற்றி
தஞ்சை மாமணிக் கோயிலாய் போற்றி
அன்பில் துயின்ற அறமே போற்றி
உத்தமர் கோயில் உகந்தாய் போற்றி 5

வெள்ளறை மேவிய விண்டுவே போற்றி
புள்ளம் பூதங் குடியாய் போற்றி
திருப்பேர் நகர்க்குடத் திருவே போற்றி
ஆதனூர் ஆண்ட ஆதி போற்றி
தேர்அழுந் தூர்நில், செழுஞ்சுடர் போற்றி 10

சிறுபுலி யூர்சேர் சீரோய் போற்றி
சேறையுள் நின்ற செங்கண்மால் போற்றி
சங்கநாள் மதியம் சார்ந்தாய் போற்றி
குடந்தைக் கிடந்த கோமான் போற்றி
கண்டியூர் நின்ற கண்ணே போற்றி 15

ஒப்பிலி அப்ப! நின் ஒண் தாள் போற்றி
கணபுரம் விரும்பிய கண்மணி போற்றி
ஆலியும் நகரியும் அமர்ந்தாய் போற்றி
நாகை அழகிய நல்மணி போற்றி
நறையூர் நின்ற நம்பி போற்றி 20

நாதன் கோயில் நல்லாய் போற்றி
இந்தளூர் மேவிய அந்தண போற்றி
திருச்சித்ர கூடச் செல்வா போற்றி
சீர்காழி விண்ணகர்ச் செம்மால் போற்றி
கூடலூர் உறையும் கோவிந்த போற்றி 25

உ

சிவமயம்

# திவ்வியப்பிரபந்தத் தல வணக்கம்

'தமிழ்க்கடல்' 'சிவமணி' **ராய. சொ.** இயற்றியது

திருவரங் கத்துஉறை தேவா போற்றி
உறையூர் நின்ற ஒருவ போற்றி
தஞ்சை மாமணிக் கோயிலாய் போற்றி
அன்பில் துயின்ற அறமே போற்றி
உத்தமர் கோயில் உகந்தாய் போற்றி 5

வெள்ளறை மேவிய விண்டுவே போற்றி
புள்ளம் பூதங் குடியாய் போற்றி
திருப்பேர் நகர்க்குடத் திருவே போற்றி
ஆதனூர் ஆண்ட ஆதி போற்றி
தேர்அழுந் தூர்நில், செழுஞ்சுடர் போற்றி 10

சிறுபுலி யூர்சேர் சீரோய் போற்றி
சேறையுள் நின்ற செங்கண்மால் போற்றி
சங்கநாள் மதியம் சார்ந்தாய் போற்றி
குடந்தைக் கிடந்த கோமான் போற்றி
கண்டியூர் நின்ற கண்ணே போற்றி 15

ஒப்பிலி அப்ப! நின் ஒண் தாள் போற்றி
கணபுரம் விரும்பிய கண்மணி போற்றி
ஆலியும் நகரியும் அமர்ந்தாய் போற்றி
நாகை அழகிய நல்மணி போற்றி
நறையூர் நின்ற நம்பி போற்றி 20

நாதன் கோயில் நல்லாய் போற்றி
இந்தளூர் மேவிய அந்தண போற்றி
திருச்சித்ர கூடச் செல்வா போற்றி
சீர்காழி விண்ணகர்ச் செம்மால் போற்றி
கூடலூர் உறையும் கோவிந்த போற்றி 25

கண்ணங் குடி,நில் காகுத்த போற்றி
கண்ண மங்கைசேர் கண்ணு போற்றி
கவித்தலம் கிடந்த கார்வணு போற்றி
வெள்ளியங் குடிவாழ் வில்லா போற்றி
மணிமாடக் கோயில் மன்னு போற்றி 30

வைகுந்த விண்ணகர் வாழ்வே போற்றி
அரிமேய விண்ணகர் ஐயா போற்றி
வண்புரு டோத்தம மருந்தே போற்றி
செம்பொன்செய் கோயில் தேசிக போற்றி
திருத்தெற்றி அம்பலச் சேவக போற்றி 35

திருத்தேவ ஞர்தொகைத் தெய்வமே போற்றி
திருமணிக் கூடச் சீதர போற்றி
காவளம் பாடிக் கருமுகில் போற்றி
திருவெள் ளக்குளத் தேவே போற்றி
பார்த்தன் பள்ளிவாழ் பண்ணவ போற்றி 40

மால்இருஞ் சோலைமால் அழகா போற்றி
கோட்டியூர் மாதவக் கோவே போற்றி
மெய்யம் அமர்ந்த மெய்யனே போற்றி
திருப்புல் லாணிச் செகநாத போற்றி
தண்காலூர்த் தாமோ தரனே போற்றி 45

மோகூர்க் காள மேகமே போற்றி
*கூடல் இலங்கு குருமணி போற்றி
லில்லிபுத் தூர்உறை விமலா போற்றி
குருகூர் ஆளும் கொற்றவ போற்றி
தொலைவில்லி மங்கலத் தூயோய் போற்றி 50

புளிங்குடிக் கிடந்த புண்ணியா போற்றி
திருப்பே ரைக்குழைச் செவியாய் போற்றி
திருவை குந்தம்நில் திருமால் போற்றி
வரகுண மங்கை மணாளா போற்றி
குளந்தை மாயக் கூத்தா போற்றி 55

* திருவாசக வரி

கோளூர் மாநிதிக் குழகா போற்றி
சீவர மங்கைத் தெய்வமால் போற்றி
குறுங்குடிக் கோமளக் கொழுந்தே போற்றி
அனந்தையில் பள்ளிகொள் அரங்கா போற்றி
வண்பரி சாரமா மாயவ போற்றி 60

காட்கரை மேவிய கருங்கடல் போற்றி
மூழிக் களத்து,நில் முகுந்தா போற்றி
புலியூர் நின்ற புங்கவ போற்றி
செங்குன்று ஊர்உறை செல்வமே போற்றி
நாவாய் இருந்த நாரணா போற்றி 65

வல்லவாழ் நில்,மது சூதனா போற்றி
வண்வண் டூர்உறை மாதவ போற்றி
வாட்டாற்றுக் கிடந்த வள்ளலே போற்றி
வித்துவக் கோட்டு வேந்தே போற்றி
கடித்தான நாரணக் கார்முகில் போற்றி 70

ஆறன் விளைக்குறள் அப்பனே போற்றி
அயிந்திர புரத்துஉறை அரியே போற்றி
கோவலில் பேர்உருக் கொண்டாய் போற்றி
அத்தியூர் வரத அரசே போற்றி
அட்ட புயகரத்து அம்மான் போற்றி 75

திருத்தண் காவிளக்கு ஒளியாய் போற்றி
வேளுக்கை வேந்த!நின் மெல்லடி போற்றி
பாடகப் பாண்டவத் தூதா போற்றி
நீரகம் நின்ற நெடுமால் போற்றி
நிலாத்திங்கள் துண்ட, நின்மல போற்றி 80

ஊரகத்து உலகினை அளந்தாய் போற்றி
வெஃகாக் கிடந்த மேலோய் போற்றி
காரகக் கருணைக் கடலே போற்றி
கார்வானக் கள்வ!நின் கழல்இணை போற்றி
கள்வனூர் வராகப் பெருமாள் போற்றி 85

பவளவண்ணப் பதும நாபா போற்றி
பரமேச் சுரவிண் பரமா போற்றி
புட்குழி இருந்த புனிதா போற்றி
நின்றவூர்த் திருவை நீங்காய் போற்றி
எவ்வுள வீர இராகவ போற்றி 90

நீர்மலை நின்ற நீர்வண போற்றி
இடஎந்தை இருடி கேசா போற்றி
கடல்மல்லைக் கிடந்த கடல்வண போற்றி
அல்லிக் கேணி,நில் அச்சுத போற்றி
கடிகை மலைவாழ் கரும்பே போற்றி 95

திருவேங் கடத்திரு மார்பா போற்றி
சிங்கவேள் குன்றச் சிங்கமே போற்றி
அயோத்தியை ஆண்ட அறிவே போற்றி
நைமிசா ரணிய நம்பா போற்றி
சாளக் கிராமத் தவமே போற்றி 100

வதரியாச் சிரம மாமுகில் போற்றி
தேவப்பிர யாகைத் தேவனே போற்றி
பிரிதிக் கேசவப் பெருமான் போற்றி
துவாரகை ஆண்ட,பைந் துளவோய் போற்றி
வடமது ரைப்பதி மைந்தா போற்றி 105

கோகுலக் கண்ண!நின் குரைகழல் போற்றி
பாற்கடல் கிடந்த பரஞ்சுடர் போற்றி
பரம பதம்அருள் பரம்பொருள் போற்றி 108

